# பாரதி இன்றிருந்தால் மகிழ்வாரா?





கல்லூரி நிலையிருக்கும் ஆறு இளைய பாரதத்தினரை அழைத்து விவாதிக்கச் சொன்னோம்...

உரையாடலில் பங்கேற்றவர்கள்:

1. குமாரி ஷீலா ராமசேஷன் (பெண்கள் கிறிஸ்துவக் கல்லூரி)
2. குமாரி எம். வி. கோதை (க்யூ. எம். ஜி. பெண்கள் கல்லூரி)
3. குமாரி எஸ். பூமா (வைஷ்ணவா பெண்கள் கல்லூரி)
4. திரு ஆர். ஹரிஹரன் (லயோலா கல்லூரி)
5. திரு கே. நரசிம்மன் (விவேகானந்தா கல்லூரி)
6. குமாரி டி. ஜெயஸ்ரீ (மீனாட்சி பெண்கள் கல்லூரி.)

ஷீலா: தமிழ் மொழியை உலகெங்கும் பரப்ப வேண்டும் எனக் கனவு கண்டவன் பாரதி. தமிழ் மொழியின் இன்றைய வளர்ச்சி கண்டு நிச்சயம் மகிழ்ந்திருப்பான். உலகின் பல்வேறு நாடுகளிலிருந்தும் தமிழகத்தைத் தேடி வந்து தமிழ் மொழியின் சிறப்பு இலக்கியப் படைப்புக்களைக் கற்றறிந்து போகும் பல மேனாட்டார்களைக் கண்டு பாரதி இன்று பூரித்துப் போயிருப்பான். அது மட்டுமல்ல... தமிழ் மொழி வளர்ச்சிக்காகத் தஞ்சையில் ஒரு தமிழ்ப் பல்கலைக் கழகமே சிருஷ்டிக்கப்பட்டுள்ளது.

ஜெயஸ்ரீ: ஹிந்தி மொழியின் இணிப்பு எந்த நேரத்தில் வருமோ என்கிற தவிப்புடன் தமிழகத்தில் தமிழைத் தலை மொழியாகத் தக்க வைத்துக் கொள்ள நாம் பயப்படும் அவல நிலை இருக்கிறதே. அதைக் கவனித்தீர்களா?

ஹரிஹரன்: இன்று 'நர்சரிகள் கான்வென்ட்டுகள்' என்று தெருக்களெல்லாம் காளான்களைப் போலத் தோன்றி ஆங்கில மோகத்தை அதிகப்படுத்தி, தமிழைக் குழந்தைகளுக்குக் கற்பிப்பது ஏதோ அவமானம் என்று பலரும் கருதும் சூழ்நிலை உருவாகியுள்ளதே! தமிழ் மீடியத்தில் படித்துத் தேறினால் பட்டப் படிப்புக்குக் கல்லூரியில் இடம் கிடைப்பது கடினமாக இருக்கிறது...

பூமா: தமிழ் மொழியின் வளர்ச்சிப் பரிமாணத்தை நாம் ஒட்டுமொத்தமாகக் கணிப்பிடும்போது 'தளர்ச்சி நிலை' என்று நீங்கள் குறிப்பிடுவது மிகவும் குறைவான அளவுதான்.... பாரதி நிச்சயம் மகிழ்ந்திருப்பான் என்பதுதான் என் கணிப்பு.

ஹரி: இளைய பாரதத்தினரின் எழுச்சி பற்றிப் பாரதி பாடினான். குடி, போதை மயக்கம், அரசியல் துவேஷங்கள், வன்முறை போன்று பலவகை ஈனத்தனங்கள் மாணவப் பருவத்திலேயே இளைய பாரதத்தினரிடையே இன்று பரவி வருவதைக் கண்டு பாரதி நாணித் தலைகுனிந்திருப்பான்!

ஷீலா: நீங்கள் ஒரு Pessimist இருண்ட பக்கங்களையே பார்த்துக் கொண்டு நமது இளைய பாரதத்தினரின் எழுச்சிகளைக் காண மறுக்கிறீர்கள். மருத்துவம், விஞ்ஞானம், கலை போன்ற பல துறைகளிலும் நமது இளைஞர்கள் உலக அரங்கில் பெற்று வரும் அங்கீகாரங்களும், பாராட்டுக்களும் உங்கள் கண்களுக்குத் தென்படவே இல்லையா?

ஜெயஸ்ரீ: இருக்கலாம். ஆனால் இத்தகைய திறமை பெற்ற இளைஞர்கள் மேனாட்டு உயர் பட்டப் படிப்புக்களையும் தேர்ச்சிகளையும் பாரத நாட்டுக்கு அளிக்காமல் மேல் நாடுகளிலேயே தங்கிச் செலவிடுகின்றனரே! இதனால் நமக்கு எவ்விதப் பலனும் இல்லையே. இந்நிலை கண்டு பாரதி வருத்தப்பட்டிருக்கமாட்டானா?...., பெண்ணுரிமை பற்றியும் நம் நாட்டில் பெண்ணுக்கு அளிக்கவேண்டிய அந்

தந்து பற்றியும், சம உரிமை பற்றியும் பாடினானே பாரதி! ஆனால் அன்றாடம் செய்தித் தாள்களைப் பிரித்தால் கற்பழிப்பு, பெண் விற்பனைக்காகக் கடத்தல், வர தட்சணைக் கொடுமையால் தற்கொலை... போன்றுதான் செய்திகள்.. .இவற்றைக் கண்டு பாரதி துடிதுடித்துப்போயிருப்பான்.

ஷீலா: இங்குதான் பலரும் தவறாகக் கணித்து வருகின்றனர். குறிப்பிட்ட சமுதாயப் பிரச்னையை இனம் கண்டு, பிரச்னைக்குத் தீர்வு காணும் பிரக்ஞையை வளர்ப்பதும், சட்ட ரீதியாக, சமுதாய ரீதியாக நட வடிக்கை எடுப்பதும்தான் முக்கியமான வையாகும். நீங்கள் சொன்ன நிகழ்ச் சிகள் எக்காலத்திலும் நிகழ்ந்து வருபவை. முன்பு இவற்றைப் பற்றிச் செய்திகள்வெளி வராது மறைக்கப்பட்டன. தற்போது செய்திகள் வெளிவந்து மக்களை யோசனை செய்ய வைக்கின்றன.

நரசிம்மன்: முக்கியமான ஓர் அம்சத்தை நாம் விட்டு விட்டோம். இன்றைக்கு அறுபது ஆண்டுகளுக்கு முன்பே சுதந்திரம் பற்றியும், தனி மனித உரிமை பற்றியும் பாரதி பாடினான். உலகின் மிகப் பெரிய ஜனநாயக நாடாக இன்று நமது பாரதம் அந்நியர் அதிகாரம் ஒழிந்து பூரண சுதந் திரத்துடன் விளங்குகிறது. இதைவிட வேறு மகிழ்ச்சி பாரதிக்கு என்ன இருக்க முடியும்?

கோதை: நீங்கள் சொல்வதெல்லாம் கேட் பதற்கும் படிப்பதற்கும் நன்றாக இருக் கின்றன. உண்மையான நிலையைப் பற்றி நாம் சிந்திக்க வேண்டும். முன்பு அந்நிய ருக்கு நாம் அடிமைப்பட்டுக் கிடந்தோம். இன்று நமது சுய்த்தர அரசியல்வாதி களுக்கு அடிமைப்பட்டுக் கிடக்கிறோம். இந்நிலை அந்நியர் ஆட்சியைவிட வேதனை தரும் அம்சமாயிற்றே!

ஷீலா: நம்மை ஆட்சிசெய்பவர்களைத் தேர்ந் தெடுக்கும் உரிமை நமக்குள்ளதே! இந்த

# வம்ச விருட்சம்

தங்கம்மாள் பாரதி (விஸ்வநாத அய்யர்)

சகுந்தலா பாரதி (நடராஜன்)

சுப்ரமணிய பாரதி
செல்லம்மாள்

சின்னசாமி அய்யர்

லக்ஷ்மி அம்மாள்

மகா கவி பாரதியாரின் பேரர் திரு. ரவிசந்திரன் கூறத் தொகுத்தவர்:
எஸ். சந்திர மௌலி.

அரசியல்வாதிகளை நாமேதானே விரும்பித் தேர்ந்தெடுக்கிறோம். இந்திரா காந்தி வேண்டாம் என்று எண்ணியபோது மக்கள் அவரது ஆட்சியைக் கவிழ்த்து ஜனதாவை ஆட்சியில் அமர்த்தினார்கள். வேண்டும் என்கிறபோது ஜனதாவைத் தோற்கடித்து மறுபடியும் இந்திராவை ஆட்சி பீடத்தில் அமர்த்தியுள்ளார்கள்... அன்னியர் ஆட்சியில் இது சாத்தியமா என்ன? அடிமையாகத்தானே கிடந்தோம்? நமது உணர்வுகளுக்கு மதிப்பா கொடுத்தார்கள். இன்று பேச்சு சுதந்திரம் பத்திரிகை சுதந்திரம் எல்லாம் உள்ளதே!

ஜெயஸ்ரீ: நாம் அரசியல்வாதிகளின் அடிமைகள்தான்! அவர்கள் விருப்பப்படிதான் எதுவும் நடக்கிறது — எந்தக் கட்சியினராக இருந்தால் என்ன? எல்லாம் ஒன்று தான்!.... 'ஜாதிச்சண்டை போச்சே என்றுன் பாரதி. தாழ்த்தப்பட்ட ஜாதியினருக்கு உத்தியோகம், படிப்பு ஆகிய துறைகளில் ஒதுக்கீடு, கலப்புத் திருமணம் செய்துகொண்டால் பதக்கம் ஆகியவை எவற்றைக் காட்டுகின்றன? இன்னும் ஜாதி வித்தியாசங்கள் நமது சமுதாயத்தில் வேரூன்றி இருப்பதை இவை தெரிவிக்கவில்லையா? தினசரியைப் புரட்டினால் 'ஹரிஜனங்கள் படுகொலை' என்கிற செய்தியை நாம் எவ்வளவு காண்கிறோம்! கல்வி சான்றிதழ்களிலும், வேலை விண்ணப்பங்களிலும், அரசே தனிமனிதனின் மதம், ஜாதியைக் கேட்கின்றது...ஜாதிச்சண்டைபோகாதது மட்டுமல்ல! இன்று அதிகரித்துள்ளது என்றே கூறலாம்...

நரசிம்மன்: நமது விவாதத்தை முடிக்கு முன்பு ஒரு விஷயத்தைச் சொல்லாமல் இருக்க முடியவில்லை என்றால்... 'தனி மனிதனுக்கு உணவில்லை எனில் ஜகத்தினை அழித்திடுவோம்!' என்று பாடியதைத் தங்களது சித்தாந்தத்தின்அடிப்படைக்குஏற்றதாக எண்ணிக் கொண்டு கம்யூனிஸ்ட் கட்சியினர் இன்று பாரதிக்கு'கம்யூனிஸ்ட் நிறத்தை' அளிப்பதைக் காண வேடிக்கையாக இருக்கிறது. இந்திய வலதுசாரிக் கம்யூனிஸ்ட்கள் தூண்டுதலாலோ அல்லது தாமாகவோ, சோவியத் ரஷ்யாவில் பாரதியார் மீது திடீர்ப் பற்று ஏற்பட்டு பாரதியின் நூற்றுண்டு விமரிசையாகக் கொண்டாடப்படவிருக்கிறதாம். வேறு எதைக் கண்டு பாரதி மகிழ்ந்திருப்பாரோ வருத்தப்பட்டிருப்பாரோ நமக்குத் தெரியாது! தன்னை ஒரு கம்யூனிஸ்டாக முத்திரை குத்துவதைக் கண்டு இன்றிருந்தால் பாரதி மிக மிக வருத்தப்பட்டுத்தான் இருப்பார்!

தொகுப்பு: நாயகன்
புகைப்படம்: எஸ். பார்த்தசாரதி



## ஒளிபடைத்த கண்ணினாய்...!

அன்றொரு நாள் குடும்பத்துடன் நான் சென்னையை நோக்கி ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன். ஒரு காலை இழந்த ஒருவன் கட்டை ஊன்றியபடி ரயிலில் பிச்சை எடுத்துக் கொண்டிருந்தான். அவனால் ஏதாவது வேலை செய்து பிழைக்க முடியும்.

மற்றவர்களுக்குத் தமிழ் தெரியாது என்ற எண்ணத்தில் "இப்படிப்பட்ட சோம்பஅடன் வேலை செய்யாது பிச்சை எடுப்பவர் களைச் கட்டுத் தள்ள வேண்டும்" என்று என் மனைவியிடம் கூறிக் கொண்டிருந்தேன்.

திடீரென்று பக்கத்திலிருந்தவர் என்னிடம் "எல்லோரையும் அப்படி நினைத்து விடாதீர்கள். எனக்குத் தமிழ்தான் தாய்மொழி. என்னைப் பாருங்கள். இரு கண்களிலும் புரையேறிவிட்டது. சிவகாசியில் வேலையிலிருந்த போது பத்து வருடங்களுக்கு முன் ஏற்பட்ட தீவிபத்தில் இரு கண்களையும் இழந்து, எந்தப் பண உதவியும் இல்லாததால் அனாதையான நான் இப்படித்தான் கையை நீட்டி இரண்டு வருடங்களாய்ப் பிழைத்துக் கொண்டிருந்தேன். நெல்லூர் பஸ்ஸில் இப்படிக் கையை நீட்டிக் காசு கேட்டிருந்த நேரத்தில் எனக்கு ஆதரவளித்து வாழ்வளிக்க முன்வந்தவளே இவள்தான்" எனத் தம் மனைவியைச் சுட்டிக் காட்டினார். சொந்தத்தில் தையற் கடையை மனைவி கவனிப்பதாகவும், ஒரு பிஸ்கட் கம்பெனியில் பேக்கிங் பிரிவில் டிரெயினிங் எடுத்து இப்போது மாதம் அறுநூறு ரூபாய் சம்பளம் வாங்குவதாகவும் இதற்கெல்லாம் வழிகாட்டி தம் மனைவியே என்றும் கூறினார்.

தொடர்ந்து அவரேபேசினார்: "என் மனைவி ஊமை. பேசத் தெரியாது. ஆனால் மன உறுதி படைத்தவள். இந்த எட்டு வருட வாழ்க்கையில் இருபதாயிரம் சேர்த்து, கண் தானத்தில் கிடைத்த இரு கண்களை ஆபரேஷன் மூலம் பொருத்தி எனக்கு ஒளியைக் கொடுக்க சென்னைக்கு என்னை அழைத்துச் செல்கிறாள். எங்கள் ஏழு வயது மகனும் ஆவலுடன் எங்களுடன் வருகிறான்" எனக் கூற எங்களுக்குக் கண்ணிலிருந்து நீர் தானாகச் சுரந்தது. அப்போது பாரதியாரின் பாடல்,

"ஒளி படைத்த கண்ணினாய் வா வா வா
உறுதிகொண்ட நெஞ்சினாய் வா வா வா"

என்ற வரிகள் என் காதில் ரீங்காரமிட்டது.

- நா. காந்திராஜன்



மகாகவி பாரதியார் சுதேசமித்திரன் பத்திரிகையில் உதவி ஆசிரியராக இருந்தபோது, அவர் உட்கார்ந்த நாற்காலியை இன்றும் பத்திரமாகப் பாதுகாக்கிறார்கள். சுதேசமித்திரன் பத்திரிகைக்கும் இது நூற்றாண்டு! அதன் இப்போதைய நிர்வாக இயக்குநர் திரு பிலிப்தாமஸ் அவர்களைக் கேட்டபோது அந்த நாற்காலியை ஒரு புனிதப் பொருளாக மதிப்பதாய்க் கூறினர். மித்திரன் காரியாலயத்தில் பாரதிக்குப் பக்கத்தில் அமர்ந்து வேலை பார்த்த திரு நடேசனைப் பேட்டி கண்டபோது...

# பக்கத்து நாற்காலியில் பாரதி!

"படத்தில்பார்ப்பது மாதிரிதான் பாரதியார் இருப்பார். கறுப்புக் கலர் கோட், மூலத்தார் வேட்டி, வெள்ளை டர்பன், நன்றாக முறுக்கிவிட்ட மீசையுடன் இருப்பார். நல்ல கம்பீரமான தோற்றம். தூரத்திலிருந்தே அவர் வருவதைப் பார்க்க நானும் எங்களது அலுவலக நண்பர்களும் வாசலிலேயே காத்திருப்போம்.

அவர் உயரத்துக்குப் பெரிய தடியைக் கொண்டு வருவார். ஒரு ஆண் மகனின் வீரத்தைக் காட்டத்தான் தாம் தடியைக் கொண்டு வருவதாக என்னிடம் சொல்லியிருக்கிறார்.

நேரத்தை மிகவும் பொன்னாக மதிப்பவர் பாரதியார். சரியாக 9-30க்கு காலையில் அவர் ஆபீசுக்கு வந்துவிடுவார். சில நேரங்களில் எங்கள் கடிகாரம் ஓடவில்லை என்றாலும் அவர் வருவதைப் பார்த்து நேரத்தைச் சரி செய்துகொள்வோம். ஆபீஸுக்கு வந்தவுடன், தமக்கு வணக்கம் சொல்லும் ஒவ்வொருத்தரிடமும் 'வந்தேமாதரம்' என்று சொல்வது இவர் பழக்கம். வந்து பத்து நிமிடத்துக்கெல்லாம் அவரவர்கள் செய்ய வேண்டிய வேலையைச் செய்யச் சொல்லிவிட்டுத்தம் வேலையில் ஈடுபடுவார். அவருடைய கையெழுத்து முத்துக் கோத்தது போல ரொம்பவும் அழகாக இருக்கும். ரொம்பவும் வேகமாக எழுதினாலும் ஒரு இடத்தில்கூட அடித்தல் திருத்தல் இருக்காது.

ஒருவனிடம் மற்றவன் கெஞ்சினாலோ, அல்லது பரிதாபமாகக் கைநீட்டினாலோ பாரதியாருக்குப் . பிடிக்காது. இந்த உலகில் யாரும் யாருக்கும் அடிமை இல்லை என்பதை அடிக்கடி சொல்வார்.

பச்சை வாழைப்பழம், பட்டாணி, இரண்டும் கண்டால் அவருக்குக் குஷி வந்துவிடும். ரொம்பவும் ரசித்துச் சாப்பிடுவார். தினமும் ஆபீஸுக்கு வரும்போது குதிரை வண்டியில் தான் அவர் வருவது வழக்கம். அப்போது சுதேசமித்திரன் ஆசிரியராக இருந்த வ.வே.சு. ஐயர் இந்த குதிரை சவாரிஇல்லாவிட்டால் மாதம் ஐந்து ரூபாய் மிச்சப்படுத்தலாமே என்று யோசனை சொல்ல அன்றுமுதல் நடந்து வர ஆரம்பித்தார் பாரதி.

அப்போது மித்திரன் அலுவலகம் அருகே காஸ் லைட் கடை ஒன்றை கரீம் என்பவர் நடத்தி வந்தார். மேல் ஜாதி, கீழ் ஜாதி என்று வேற்றுமை பார்த்த காலம் அது. பாரதியாருக்குக் கரீமைக் கண்டால் பிடிக்கும். கரீமிடம் பல கவிதைகளைப் பாரதியார் சொல்லியிருக்கிறார்.

ஒருமுறை கரீம் பாரதியிடம் 'எப்போதும் இந்து தெய்வங்கள் மேலே பாடுகிறீர்களே





✖ நடேசன்
✖ பாரதி பயன்படுத்திய நாற்காலி

அல்லாவைப் பற்றிப் பாட முடியுமா?' என்று கேட்டார். கேட்டதுதான் தாமதம். சுவ ரத்துடன் அல்லாமேல் ஒரு பாட்டை இரண்டே நிமிடத்துக்குள் பாரதி பாடினார். இந்தச் சம்பவம் அப்போது பெரிய பர பரப்பை ஏற்படுத்தியது.

ஒருநாள் மாலை வேளை, பொழுது போக்க பாரதியாரும் நானும் மீன் காட்சி சாலைக்குச் சென்றோம். வரும் வழியில் திடீரென்று பெரிய மழை பிடித்துக் கொண்டது. அது வரை பார்க்காத பத்து அங்குலம் மழையில் நனைந்துவிட்ட என்னிடம் தம் டர்பனை அவிழ்த்து, துடைத்துக்கொள்ளச் சொன்னார். அப்போதுதான் ''பாரத சமு தாயம் வாழ்கவே'' என்ற பாடல் தோன்ற அவர் சொல்ல ஆரம்பித்தார். நான் அப் படியே எழுதிக் கொண்டேன். மறுநாள் என்னை ரொம்பவும் கவர்ந்த அந்தப் பாடலை ஆசிரியர் வ. வே. சு. ஐயரிடம் காண்பிக்க அவர் மிகவும் சந்தோஷப்பட்டு, அன்றைய மித்திரனில் பாடலும் வெளிவந்தது.

செய்திகளைச் சுருக்கக் கூடாது என்று பாரதியார் நினைப்பவர். எளிய தமிழில் பாமர மக்களும் புரிந்துகொள்வது மாதிரி செய்திகள் இருக்க வேண்டும் என்று என் னிடம் அவர் முன்பு சொல்லியுள்ளார். இதே பழக்கத்தைத் தம் கவிதைகளிலும் கடைப் பிடித்தார். அவர் இறந்தபோது நாடே சோகமயமாகி விட்டது. எல்லா ஜாதியின ரும் கண்ணீரால் அவருக்கு அஞ்சலி செய் தனர். என்னால் அன்று சாப்பிடவே முடிய வில்லை'' என்று சொல்லும்போது நடேசன் கண்களிலிருந்து தாரை தாரையாகப் பெருகி யதைப் பார்த்தேன்.

-பேட்டி : சிக்கி
படம்: உத்ரா

---

## உங்கள் குழந்தை பாரதி!

பாரதி நூற்றாண்டு தொடங்குகிற தினம், 1981 டிசம்பர் 11ம் தேதி, பாரதியாரின் பிறந்த நாளன்றே உங்களுக்கு ஒரு குழந்தை பிறக்குமானால்....

அதற்கு நீங்கள் பாரதி என்று பெயர் சூட்டி அழைக்கத் தயாராக இருப்பீர்களே யானால்....

நீங்கள் ஓராண்டுக்கு மேலாகக் கல்கி வாசக ராக இருந்து வந்திருப்பீர்களேயானால்...

கீழேயுள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்பவும்.

ஒரே ஒரு கூப்பன்தான் வந்து சேர்கிறது எனில் ரூ. 500 பரிசுத் தொகை முழுவதும் அந்தக் குழந்தைக்கே!

ஒன்றுக்கு மேல் பத்துக் கூப்பன்கள்வரை வந்தால் பரிசுத் தொகை பகிர்ந்தளிக்கப் படும்.

பத்துக் கூப்பன்களுக்கும் அதிகமாக வந் தால் பத்து அதிர்ஷ்டக் குழந்தைகள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பரிசுத் தொகை அவர்களுக்குப் பகிர்ந் தளிக்கப்படும்.

மற்ற கூப்பன்களை அனுப்பியவர்களுக்கு ஆறுதல் பரிசாக கல்கி பொங்கல் மலர் இலவசம். (அதிகபட்சம் 50 பேருக்கு)

உறையின் மேல், ''எங்கள் குழந்தை பாரதி'' என்று குறிப்பிடவும். கூப்பனுடன் குழந்தை பிறந்த தேதிக்கு டாக்டரின் சான் றிதழ் அல்லது நகராட்சியின் சான்றிதழ் இணைக்க வேண்டும். சான்றிதழ் இணைக்கப் படாத கூப்பன் நிராகரிக்கப்படும். திருப்பி அனுப்புதல் இல்லை. கடிதப் போக்கு வரத்தும் கிடையாது. சந்தேகம் எழும் விஷயங்களில் ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

கூப்பன் பெறக் கடைசித் தேதி: டிசம்பர் 23, 1981.



**கூப்பன்**

நான் ஓராண்டுக்கு மேலாகக் கல்கி படித்து வருவதாக உறுதிமொழி அளிக்கிறேன். என் குழந்தை 1981 டிசம்பர் 11ம் தேதியன்று பிறந்தது என்பதற்கு இத்துடன் சான்றிதழ் இணைத்துள்ளேன். குழந்தைக்கு பாரதி என்று பெயர் சூட்டி அந்தப் பெயரிலேயே அதனை என்றும் அழைத்து வருவேன் என வாக்களிக் கிறேன்.

பெயர் ..............................

கையெழுத்து ..............................

விலாசம்: ..............................

..............................

..............................

# கல்கி

ஜனவரி 17
பொங்கல் மலர்

அதிக பக்கங்கள் ✲ அதே விலை

மூன்று புதிய தொடர்கள் +
முழு நீள நாவல்

வழங்குவோர் :

**லக்ஷ்மி**
**செம்பியன்**
**ஜெயந்தன்**
**பாக்கியராஜ்**


அங்கே போகாதே! ஆபத்து!
பதவி
கேரள காங்கிரஸ் (எம்)
காங்கிரஸ் (ஐ) தலைமை


விரல்லெ மை தடவும் போது கொஞ்சம் மேலே பட்டுடுத்து, அவ்வளவு தான், கவலைப்படாதே!
இந்தியன்
பத்திரிகைகள்


தமிழக இ.காங்கிரஸ்
பாராட்டு
பாராட்டு

# அமரகவியின் அதிர்ஷ்டம்!

மகாகவி பாரதி நம்முடைய பாரத நாட்டிலே பிறந்தது நமது பெரும் பாக்கியம் என்று பலரும் கூறக் கேட்டிருக்கிறோம். ஆனால் சற்று யோசித்தோமானால் இதனை 'நமது பாக்கியம்' என்று குறிப்பிடுவதை விட 'அவருடைய அதிர்ஷ்டம்' என்று சொல்வதே அதிகப் பொருத்தம் என்பது புரிந்து போகும்!

'அவர் காலம் கடந்த கவி; எந்நாளைக்கும் பொருத்தமான, சமுதாயப் பிரக்ஞையுடைய பாடல்களைப் பாடிச் சென்றார்' என்கிறோம். ஆனால் பாரதியின் பாடல்களில் எதுவுமே பழங்கதையாகிப் போகாமல் காத்துத் தருவோர் யார்? நாம்தானே! எனவேதான் கூறுகிறோம், 'பாரதி, பாரத புண்ணிய பூமியில் பிறந்தது அவருடைய அதிர்ஷ்டம்' என்று!

உதாரணமாக 'தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்' என்று பாரதி பாடினார். இன்று சுதந்திரம் பெற்று 34 ஆண்டுகளுக்குப் பிறகும், தெருவெல்லாம் ஆங்கில முழக்கம்தான் கேட்கிறது! எங்கு நோக்கினும் ஆங்கில மீடியம் நர்ஸரி பள்ளிகள் தோன்றிய வண்ணம் இருக்கின்றன. 'ஆங்கில மீடியத்தில் படித்தால்தான் அறிவாளிகள் தோன்றுவார்கள்' என்று கர்ம சிரத்தையாக ஆராய்ச்சி செய்து அறிக்கை வெளியிட்டிருக்கிறார்கள். அதை வரவேற்று, பாராட்டி ஆங்கில நாளிதழ்கள் தலையங்கம் எழுதுகின்றன. ஆக, பாரதி பாடலுக்கு இன்றும் தேவையிருக்கும்படி நாம் கருத்துடன் கவனித்துக் கொள்கிறோம் என்றாகிறது இல்லையா? பாரதியார் வேறு ஏதாவது ஒரு தேசத்தில் பிறந்திருந்தால் இந்தப் பெருமை அவருக்குக் கிட்டியிருக்குமா? அங்கே வீதியெல்லாம் தாய் மொழியே தழைத்திருக்கும். பாரதி பாடலுக்கு அவசியமில்லாது போயிருக்கும். புதிய சூழலில் பாடல் அர்த்தமற்றதாகி யிருக்கும். இப்படிப்பட்ட அபசாரத்தை நாம் செய்யவில்லை. அவரைச் சிரஞ்சீவிக் கவியாக்கிக் கொண்டிருக்கிறோம். நல்ல வேளை பாரதி நம் நாட்டில் பிறந்தார்! ஆகா! அவர் அதிர்ஷ்டமே, அதிர்ஷ்டம்!

இது மட்டுமா? ''ஜாதி மதங்களைப் பாரோம்'' என்றார். அந்த வாக்குக்கு என்றும் தேவையும் மதிப்பும் இருக்கவேண்டும் என்பதற்காகவே மீனாட்சிபுரங்களை சிருஷ்டித்துக் கொண்டிருக்கிறோம். நமக்கு பாரதியிடம் அவ்வளவு கருணை!

''கங்கை நதிப்புறத்து கோதுமைப்பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்ளுவோம்;
சிங்க மராட்டியர்தம் கவிதை கொண்டு
சேரத்துத் தந்தங்கள் பரிசளிப்போம்''

என்றார் பாரதி.

இந்தப் பாடலும் மதிப்பிழந்து விடக்கூடாதே என்று நமக்குக் கரிசனம்! எனவே, தென்னகத்து ஏழைகள் பம்பாய் நடைபாதையிலிருந்து விரட்டி அடிக்கப் படுகிறார்கள்; கர்நாடகத்தில் தமிழனுக்கு எதிர்ப்புக் காட்டுகிறார்கள்; தமிழகத்தில் 'மலையாளி ஆதிக்கம்' என்று கூப்பாடு போடுகிறார்கள்; பஞ்சாபியர் தனி நாடே கோருகிறார்கள்!

'அறிவெனும் இரவி எழுந்து விளங்கு'வதாய் பாரதி பாடினான், திருப்பள்ளி எழுச்சியில். அது நடந்து விட்டால் இந்தப் பாடலை நாம் அடிக்கடி நினைவூட்டிக் கொள்ள அவசியமே இல்லாது போகுமே! எனவேதான் சுதந்திரம் பெற்று 34 ஆண்டுகளுக்குப் பிறகும் நாம் கர்ம சிரத்தையாக இந்த நாட்டில் கோடிக்கணக்கானவர்களைப் படிப்பறிவற்றவர்களாகவே வைத்திருக்கிறோம்!

'புன்மை இருட்கணம் போய்'விட்டால் நாம் ஒருவேளை பாரதியை மறந்து விடவே நேரலாம். அது பெரிய குற்றம் அல்லவா? எனவேதான் மூட்டைக்கு ரூ 40 வீதம் இருபதாயிரம் மூட்டை சிமெண்ட் விநியோகத்தில் மறக் கட்டளையிட்டு அறக்கட்டளைக்குப் பணம் சேர்த்தவர் இன்னமும் ஆட்சியில் அமர்ந்திருக்கிறார்!

இப்படி ஒன்றா இரண்டா? எத்தனையோ காரியங்களைக் கவனமாகச் செய்து வருகிறோம், பாரதியை நம்மில் யாருமே, என்றுமே மறக்கக் கூடாது என்பதற்காக. 'பாரதியின் இருநூறாவது ஆண்டு கொண்டாடப் படும்போதும் இதே நிலைமை நீடிக்கும்' என்று இந்த நூற்றாண்டு தினத்தில் சத்தியப் பிரமாணம் மேற்கொள்வோமாக!

வாழ்க பாரதி நாமம்; வெல்க பாரத தேசம்!

1981 டிசம்பர் 13
துன்மதி கார்த்திகை 28
மலர்: 40 இதழ்: 20



**கல்கி**



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

ஆசிரியர் கல்கியின் ஜாதக விசேஷம் என்ன வென்றால், அவர் என்ன எழுதினாலும், அல்லது எந்தக் காரியத்தை ஆரம்பித்தாலும் அதை மற்ற எழுத்தாளரும் பத்திரிகைக் காரர்களும் தாக்க வேண்டும் என்பதுதான்!

ஆனால் மேற்படி வழக்கத்துக்கு விரோதமாகச் சென்ற 1944-ம் ஆண்டில் ஒரு அதிசய சம்பவம் நிகழ்ந்தது. அதாவது ஆசிரியர் கல்கி எழுதிய விஷயத்துக்கும் ஆரம்பித்த காரியத்துக்கும் தமிழ் நாட்டில் மகத்தான வரவேற்புக் கிடைத்தது! அரசியல் பிரமுகர்கள், இலக்கிய விமர்சகர்கள், எழுத்தாளர்கள், பத்திரிகைக் காரர்கள் எல்லோரும் ஒரு முகமாக ஆதரித்தார்கள்.

கல்கி ஆரம்பித்ததாயிற்றே என்று யாரும் கச்சையைக் கட்டிக்கொண்டு எதிர்ப்பு முன்னணி தொடங்கவில்லை. அதற்குப் பதிலாக எல்லாரும் ஒன்று சேர்ந்து ஆதரவு தந்தார்கள்.

அப்படிப்பட்ட காரியம் என்னவென்பதை நேயர்கள் இதற்குள் ஊகித்திருக்கலாம்.

அமரகவி பாரதியாரின் ஜன்ம பூமியாகிய எட்டயபுரத்தில் அவருடைய ஞாபகச் சின்னம் ஒன்று ஏற்படுத்துவதற்காகக் கல்கி ஆரம்பித்த முயற்சிதான். வெற்றிகரமாய் முடிந்த அந்த மகத்தான முயற்சிக்கு மூல காரணமாக அமைந்தது கல்கி எழுதிய ''பாரதி பிறந்தார்'' என்ற ஒரு கட்டுரையே யாகும்.

- சின்ன அண்ணாமலை

# பாரதி பிறந்தார்!

## பேராசிரியர் கல்கி

பாரதி தினக் கொண்டாட்டங்கள் வருஷந்தோறும் செப். 11ந் தேதி தமிழ் நாட்டில் நடக்கின்றன. ஒரு வருஷம் நடந்த ஒரு கொண்டாட்டத்தில் ஒரு பிரசங்கி பாரதியாரின் பெருமையையும் அவருடைய கவியின் மகிமையையும் பற்றிப் பேசிவிட்டுப் பின் வருமாறு பேச்சை முடித்தார்:

''அப்பேர்ப்பட்ட பாரதியார் இன்றைய தினம் இந்த மண்ணுலகை விட்டுப் பொன்னுலகை அடைந்தார்! அவரை நாம் எல்லோரும் பின்பற்றுவோமாக!''

ஆனால், அந்தக் கூட்டத்தில் இருந்தவர் ஒருவராவது அன்றைய தினம் பாரதியாரைப் பின்பற்றவில்லை! பிறருக்குப் போதனை செய்த பிரசங்கி கூட அவரைப் பின்பற்றிப் பொன்னுலகம் சேரவில்லை. எல்லாரும் கல்லுப் பிள்ளையாரைப் போல் உட்கார்ந்திருந்துவிட்டுத் தத்தம் வீட்டுக்குச் சென்றார்கள்.

இப்படிப்பட்ட பேச்சு விபரீதங்களுக்குக் காரணமாயிருப்பது என்னவென்றால், பாரதியாரின் ஞாபகத்தைக் கொண்டாடுவதற்கு நாம் அவருடைய மரண தினத்தை ஏற்படுத்திக் கொண்டதேயாகும். அவர் இறந்து போனதை ஏன் அவ்வளவு உற்சாகமாகக் கொண்டாட வேண்டும் என்றும், அதற்குப் பதிலாகப் பிறந்த தினத்தைக் கொண்டாடுவது பொருத்தமில்லையா என்றும் ஒரு பிரச்னை வருஷா வருஷம் கிளம்புகிறது.

இந்தக் கேள்விக்குக் காரைக்குடி தேச பக்தரும் பாரதியாரைப் பார்த்துப் பழகும் பாக்கியம் பெற்றவருமான ஸ்ரீ சா. கணேசன் சென்னையில் நடந்த கொண்டாட்டத்தில் பதில் சொன்னார்:

''பிறக்கும்போது எல்லா மனிதர்களும் ஒரே மாதிரிதான் பிறக்கிறார்கள். வித்தியாசமே கிடையாது. இறந்து, ஒழிந்து, செத்து மாய்ந்து, மடிந்துபோன பிறகுதான் ஒருவருடைய பெருமையும் மகிமையும் நன்கு புலனாகிறது. ஆகையால், பாரதியார் மாண்ட தினத்தை — மாண்ட அதாவது மகிமை வாய்ந்த தினத்தை — கொண்டாடுவதுதான் சாலப் பொருத்தமானது!''

ஸ்ரீ சா. கணேசனுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தபோது, எனக்கு ஒரு விஷயம் புலனாயிற்று. பாரதியார் அவ்வளவு அவசரமாக — நம்மைப் போன்ற துரதிர்ஷ்டசாலிகள் அவரைத் தரிசிக்கும் பாக்கியம் பெறுவதற்கு முன்னாலேயே — ஏன் காலமானார் என்று தெரிய வந்தது.

இறந்து, ஒழிந்து, செத்து, மாண்டுபோன பிறகுதான் தம்முடைய மகிமையும் பெருமையும் வெளியாகும் என்பது பாரதியாருக்கும் தெரிந்திருக்க வேண்டும். மகிமையும் பெருமையும் அடைவதற்காக யார்தான் கொஞ்சம் அவசரப்பட மாட்டார்கள்?

⊙ ⊙ ⊙

பெரியவர்கள் பிறந்த தினத்தைக் கொண்டாடுவதா, இறந்த தினத்தைக் கொண்டாடுவதா என்பது உண்மையில் ஒரு சிக்கலான பிரச்னைதான். நமது பூர்வீக சம்பிரதாயங்களைப் பார்த்தாலும் இந்தச் சிக்கலைத் தீர்க்க உதவி ஏற்படவில்லை. இராமன், கிருஷ்ணன் முதலியவர்கள் பிறந்த தினத்தைக் கொண்டாடுகிறோம். ஆழ்வார்கள், நாயன்மார்கள் முதலியவர்கள் திருநாடு சேர்ந்த தினத்தைக் கொண்டாடுகிறோம். எது சரியான முறை?

⌘ பாரதி மணிமண்டபம், எட்டயபுரம்



கொஞ்சம் யோசித்துப் பார்த்தால், நமது பூர்வீக சம்பிரதாயத்திலும் ஒரு முறை இருப்பதாகவே தெரிகிறது.

தேவர்கள் வந்து பூலோகத்தில் அவதரிக்கும்போது அவர்களுடைய ஜன்ம தினத்தைக் கொண்டாடுகிறோம்.

சாதாரண மனிதப் பிறவி எடுத்தவர்கள் அரும் பெரும் காரியங்களைச் செய்துவிட்டு மரணம் அடையும்போது உண்மையில் அவர்கள் அமரர்களாகவும் சிரஞ்சீவிகளாகவும் ஆகிறார்கள். எனவே, அவர்கள் மனிதப் பிறவியை நீத்து அமர பதவியை அடைந்த தினத்தைக் கொண்டாடுவதும் பொருத்தம் தான்!

ஆனாலும் ஒன்று நிச்சயமாகக் கூறலாம். பிறந்த தினத்தைக் கொண்டாடுவது முறையா, மரண தினத்தைக் கொண்டாடுவது முறையா என்னும் பிரச்னை எப்படித் தீர்ந்த போதிலும் பெரியவர்கள் பிறந்த தினமும் முக்கியமானதுதான் என்பதில் சந்தேகமில்லை.

ஏனெனில் ஒருவர் மரண மடைவதற்கு ஆதாரமான காரியம் அவருடைய பிறப்பே யல்லவா? பிறக்காவிட்டால் இறக்க முடியாதல்லவா? எனவே, பாரதியார் பிறந்த நாளும் முக்கியமானதுதான். அதைப் போலவே அவர் பிறந்த இடமும் முக்கியமானது என்பதில் சந்தேகமில்லை.

• • •

ஆங்கில மகா கவியான ஷேக்ஸ்பியர் பிறந்த தினத்தை அவர் பிறந்த ஊரிலேயே கொண்டாடுவது பற்றி ஆங்கிலப் பத்திரிகைகளில் படிக்கும்போதெல்லாம் எனக்கு எட்டயபுரம் ஞாபகம் வருவதுண்டு.

ஷேக்ஸ்பியர் பிறந்த ஊரில் அவருடைய தாயார் வசித்த குடிசை ஒன்று முக்கியமான காட்சிப் பொருளா யிருக்கிறதாம். அந்தக் குடிசையை ஏறக்குறைய வருஷா வருஷம் புதுப்பித்துக் கட்ட வேண்டி யிருக்கிறதாம்! ஏனென்றால், ஷேக்ஸ்பியர் பிறந்த தினத்தில் அவருடைய ஊருக்கு வரும் லட்சக் கணக்கான ஜனங்கள், ஷேக்ஸ்பியரின் ஞாபகார்த்தமாக மேற்படி குடிசையிலிருந்து ஒவ்வொரு சிறு பகுதியைப் பிய்த்து எடுத்துக்கொண்டு போய்விடுவார்களாம்! அவர்கள் வந்து போன பிறகு அநேகமாக அக்குடிசையில் குட்டிச்சுவர்தான் பாக்கி இருக்குமாம்.

மேற்படி குடிசை ஷேக்ஸ்பியரின் தாயார் வசித்த குடிசை என்பது வெறும் கட்டுக் கதையே என்று அனைவரும் அறிந்திருந்த போதிலும் அதைப் பற்றி யாரும் கவலைப் படுவதில்லையாம்! ஷேக்ஸ்பியரின் பெயரால் நடக்கும் மோசடியைக்கூட ஷேக்ஸ்பியர் கொண்டாட்டத்தில் ஒரு முக்கிய அம்சமாகக் கருதி, குதூகலத்துடன் அக்குடிசைக் கூரையில் ஒரு பகுதியைப் பிய்த்துக் கொண்டு போய்விடுவார்களாம்! ஆங்கிலேயர் தங்களுடைய கவிஞரை அப்படிப் பாராட்டுகிறார்கள்!

இதையெல்லாம் படிக்கும்போது எனக்கு எட்டயபுரம் ஞாபகம் வரும். அதோடு எட்டயபுரத்தை இன்னும் ஒரு தடவைகூட நாம் போய் எட்டிப் பார்த்து வரவில்லையே என்று அவமானமாயுமிருக்கும். ''பாரதியார் பிறந்த எட்டயபுரம் நமக்கு எட்டாத



✕ பாரதியார் மண்டபம் திறப்பு விழாவின்போது மேடைத் தோற்றம்: இடமிருந்து வலமாக எட்டயபுரம் ராஜா, ஓமந்தூரார், சோமயாஜுலு, ராஜாஜி. முன்னால் கல்கி

பழமாகவே இருந்து விடுமோ!'' என்றும் சில சமயம் ஆதங்கமடைவேன்.

நல்ல வேளையாக இந்த வருஷத்தில் (1945) பாரதியார் திருநாளுக்குச் சில தினங்களுக்கு முன்னால் எட்டயபுரம் போவதற்கு எனக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. இந்தச் சந்தர்ப்பத்தை எனக்கு ஏற்படுத்தித் தந்தவர்கள் எட்டயபுரத்தில் உள்ள ஆரம்பப் பாடசாலை உபாத்தியாயர்களான சில இளைய நண்பர்கள். இவர்கள் ''பாரதி இலக்கிய மன்றம்'' என்பதாக நமது தேசியக் கவியின் பேரால் ஒரு சங்கம் ஏற்படுத்தி நடத்தி வருகிறார்கள். ஒரு சங்கத்தின் ஆதரவில் தமிழிசை மகாநாடு ஒன்று நடத்த ஏற்பாடு செய்து அதற்கு என்னை வரும்படி அழைத்தார்கள். பாரதியார் பிறந்த ஊரைப் பார்த்துவிட வேண்டும் என்ற ஆவல் காரணமாக நானும் தக்ஷணமே ஒப்புக்கொண்டேன். ஆனால் அவ்வளவு தக்ஷணமாக அவர்கள் குறிப்பிட்ட தேதியில் போக முடியவில்லை. நானாக இரண்டு மூன்று தடவையும், மகாநாட்டுத் தலைவர் டி.கே.சி. இரண்டு மூன்று தடவையும் தள்ளிப் போட்ட பிறகு கடைசியில் நானாகவே ''செப்டம்பர் 9ந் தேதி கட்டாயம் வருகிறேன்; வந்தே தீருவேன்; அப்படித்தான் வருவேன்; வராமல் இருக்க முடியாது'' என்று மேற்படி சங்கத்தின் தலைவருக்குத் தந்திமேல் தந்தி கொடுத்து விட்டுப் போய்ச் சேர்ந்தேன்.

• • •

எட்டயபுரத்தில் தமிழிசை மகாநாடு மிகச் சிறப்பாக பாண்டு வாத்திய முழக்கங்களுடன் ஆரம்பமாயிற்று. மகாநாட்டை எட்டயபுரம் மகாராஜா அவர்கள் கதையில் வரும் மந்திரவாதியைப் போல் திறந்து வைத்தார். அதாவது மகாராஜா ''திற!'' என்றதும் மகாநாடு திறந்து கொண்டது.

பிறகு ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் ஏற்கனவே உட்கார்ந்திருந்த

அக்ராசன பீடத்தில் இன்னும் கொஞ்சம் பலமாக அமர்ந்தார்.

பின்னர் உபசாரப் பத்திரம் படித்துக் கொடுத்தல். எனக்குக் கொடுக்க இருந்த பத்திரத்தைப் படிக்க ஆரம்பித்தபோது, ''நானே படித்துக் கொள்கிறேன்; கொடுத்து விடுங்கள்!'' என்று கையை நீட்டினேன். காரிய தரிசி முடியாது என்று மறுத்துவிட்டு, தாமே ஒருதடவை படித்த பிறகுதான் கொடுத்தார். நான் அதை வாங்கிப் படித்த பிறகுதான் ரகசியம் வெளியாயிற்று. உபசாரத்தில் அச்சுப் பிழைகள் தாராளமாக இருந்தன. ''உங்கள் பத்திரத்திலே என்று அச்சுப் பிழைகள் அதிகமாக வந்திருக்கின்றன. பாருங்கள்!'' என்றார் காரியதரிசி. மற்ற வர்கள் படிக்கவே மாட்டார்கள். படித்தா லும் அவர்களுக்குப் பிழை கண்ணில் படாது என்று அவருக்கு அவ்வளவு தைரியம்!

மாலையில் மறுபடியும் எட்டயபுரம் தமிழிசை மகாநாடு கூடியது. திருநெல்வேலி காலேஜ் பொருளாதார புரொபஸரும் பிரசித்த சாகித்யகர்த்தா ஸ்ரீநீலகண்ட சிவம் அவர்களின் வம்சத்தில் வந்தவருமான ஸ்ரீமதி சாரதாம்பாள் எம். ஏ., வீணையுடன் தமிழிசை பாடினர். பிறகு, அக்கிராசனர் டி.கே.சி. அவர்களின் பிரசங்கமும் மற்ற பிரசங்கங்களும் அதிகப்பிரசங்கங்களும் முறைப் படி நடந்து முடிந்தன. எல்லாம் வெகு விமரிசையாக நடந்தது.

இராத்திரி ஸ்ரீ அமிருதஸ்வாமி, அவர்களின் இல்லத்தில் நடந்த விருந்து உள்படத் தான்.

அமிருதஸ்வாமி என்பவர் எட்டயபுரம் ஜமீன்தாரின் மைத்துனர்; அதாவது சகோதரியின் கணவர். இவர் இருக்கிறார் என்கிற தைரியத்திலே எட்டயபுரத்து இளைஞர்கள் யாரை வேண்டுமானாலும் அவர்களுடைய பாரதி இலக்கிய மன்றக் கூட்டங்களுக்கு அழைத்து விடுவார்களாம்! அழைக்க வேண்டிய பொறுப்பு அவர்களுடையது; வந்தவர்களுக்கு விருந்துஉபசரிக்கவேண்டிய பொறுப்பு ஸ்ரீ அமிருதஸ்வாமி அவர்களுடையது!

ஸ்ரீ அமிருதஸ்வாமி, பாரதியாரின் ஜீவிய காலத்தில் அவரோடு பழகி, அவருடைய பாட்டைக் கேட்டவராம். பாரதியார் பாடுவது போலவே சில பாடல்களின் முதல் அடிகளைப் பாடிக் காட்டினர். ''பாரதியார் இப்படித்தான் பாடுவார்!'' என்று டி.கே.சி. சாட்சி கூறினர்.

அன்றைய இரவு எங்களுக்கு வெகு நீண்ட இரவாகத் தோன்றியது. பொழுது எப்பொழுது புலரும் என்று இருந்தது. ஏனென்றால், மகாநாடு முடிந்தது என்றாலும் உண்மையில் எதற்காக நான் வந்தேனோ அந்தக் காரியம் ஆகவில்லை. பாரதியார் பிறந்த வீட்டைப் பார்த்தாகவில்லை. மறுநாள் காலையிலேதான் பார்ப்பதாக இருந்தோம்.

மெதுவாகப் பொழுது விடிந்தது. பாரதியாரின் மூத்த புதல்வி ஸ்ரீமதி தங்கம்மாள் முதல் நாள் வைபவத்துக்காக வந்திருந்த படியால் அவரே எங்களுக்குப் பாரதியார் வீட்டைக் காட்டுவதாக முன் வந்தார். எல்லாருமாகக் கிளம்பினோம்.

எட்டயபுரம் வீதிகளிலே நடந்து போகையிலேயே எனக்கு என்னவோ செய்தது. ''இந்த வீதிகளின் வழியாகப் பாரதியார் எத்தனையோ நாள் நடந்து போயிருப்பார் அல்லவா? இந்தத் தெருப் புழுதியெல்லாம் அவர் மேலும் பட்டிருக்குமல்லவா?'' என்று நினைத்தபோது, பாரதியாரோடு புதிய உறவு ஏற்பட்டு விட்டதாக எனக்குத் தோன்றியது. பின்னோடு வந்தவர்களில் ஒருவரின் கால் தடுக்கி நான் கீழே விழப் பார்த்து அவர் என்னைப் பிடித்துக் கொண்டபோது ''அடடா! விழாமற் போனேனே! இந்த எட்டயபுரத்துப் புழுதியில் இன்னும் கொஞ்சம் சென்னைக்குக் கொண்டு போயிருக்கலாமே?'' என்று நினைத்தேன்.

பாரதியார் வாழ்க்கையில் ஒரு சிறு சம்பவமும் அப்போது நினைவுக்கு வந்தது.

பாரதியார் சில காலம் கடையம் என்னும் கிராமத்தில் தங்கி யிருந்தார். அப்போது ஒரு தடவை எங்கேயோ போவதற்காக ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்று ரயில் ஏறினர். பெரும்பாலும் மெய் மறந்து பரவச நிலையில் உள்ளவராதலால் ரயில் ஏறும்போது காலைப் படியில் வைப்பதற்குப் பதிலாகப் பக்கத்தில் வைத்து விட்டார். தடால் என்று பிளாட்பாரத்தில் விழுந்தார்,



## பெண்மை வாழ்கென்று...

பெண்மை வாழ்கென்று கூத்திடுவோமடா
பெண்மை வெல்கென்று கூத்திடுவோமடா!

என் கணவருக்கோ, அவரின் பெற்றோருக்கோ பெண் குழந்தை என்றாலே பிடிக்காது. இந்நிலையில் எனக்கு இரண்டாவது குழந்தையும் பெண்ணாகவே பிறந்து விட்டது. என் கணவர் என்னைப் பார்க்கவோ குழந்தையைப் பார்க்கவோ வரவேயில்லை.

அப்போது எங்களோடு மற்றொரு போர்ஷனில் குடியிருந்த பாரதியாரின் தாய் மாமனார் திரு சாம்பசிவ அய்யர் என் நிலையைப் பார்த்துவிட்டு உடனே போய் என் கணவரை இழுத்து வந்தார்.

ஆஸ்பத்திரியிலேயே ''பெண்மை வாழ்கென்று....'' என்று பெருங் குரலெடுத்துப் பாடினர். என் கணவருக்குத் தம் செய்கை வெட்கத்தைக் கொடுத்தது.

இன்று இருபத்தி ஐந்து வருடங்கள் ஓடி விட்டன. எனது மூன்று பெண்களையும் எம்.ஏ. வரை படிக்க வைத்துள்ளார். அவர்கள் வேலையும் பார்த்து விவாகமும் செய்து கொண்டு சிறப்பாக வாழ்கின்றனர். என் கணவருக்கோ எப்பொழுதும் பெண்களின் பெருமைதான். **திருமதி ஜெயலக்ஷ்மி**



அருகில் இருந்தவர்கள் எல்லோரும் ''ஐயோ! பாரதியார் விழுந்து விட்டாரே!''என்று அலறிப் புடைத்துக் கொண்டு அவரைத் தூக்க வந்தார்கள் ''தூக்காதே!''''கிட்டவராதே'' என்று ஆவேசம் வந்தவரைப் போல் கூவினார் பாரதியார். ''இது என்ன வம்பு!'' என்று மற்றவர்கள் திகைத்து நிற்க, பாரதியார், மீண்டும், ''ஆகா! இந்தப் புண்ணிய பூமியிலே படுப்பதற்கு, இந்தப் பாரத நாட்டின் புழுதியிலே புரள்வதற்குக் கொடுத்து வைக்க வேண்டாமா? எத்தனை பெரியோர்கள், எத்தனை மகான்கள், எத்தனை கற்புக் கரசிகள், எவ்வளவு மகா கவிகள், கலைஞர்கள், அவதார புருஷர்கள் வாழ்ந்த தேசம் இது? இப்பேர்ப்பட்ட தாய் நாட்டின் மண்ணில் இன்னும் கொஞ்சம் புரண்டுவிட்டு வருகிறேன். எல்லாரும் எட்ட நில்லுங்கள்!'' என்று சொல்லிவிட்டு அனைவரும் பார்த்திருக்க, அந்த ரயில் ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் உண்மையிலேயே புரண்டாராம். ரயில் டிரைவரும் கார்டும் கூடப் பிரமித்துப் போய் நின்று பாரதியார் எழுந்து வந்து ரயிலில் ஏறிய பிறகுதான் ரயிலை விட்டார்களாம்.*

எட்டயபுரத்துப் புழுதியில் விழுந்து புரண்டால் ஒருவேளை அடுத்த ஜன்மத்திலாவது பாரதியாரைப் போல் ஒரு பாடல் பாடும் சக்தி வராதா என்ற ஆசை எனக்குஅப்போது ஏற்பட்டது. அப்படிச் செய்தால் ஒருவேளை வேஷ்டி அழுக்காய்ப் போய்விடுமோ என்ற பயம் வந்து மேற்படி ஆசையைத் தடுத்துக் கொண்டது.

சந்து பொந்துகளின் வழியாகச் சென்று கடைசியில் பாரதியார் பிறந்த வீட்டை அடைந்தோம். வீட்டுவாசலில் ஒன்றுக்கு மேல் ஒன்று உயரமாக இரண்டு விசாலமான திண்ணைகள் இருக்கின்றன. மேல் திண்ணையின் ஓரத்தில் சுவரில் ஒரு குறுகலான வாசற்படி காண்கிறது. அதற்குள்ளே இருந்த அறையிலேதான் பாரதியார் பிறந்தார் என்று சொன்னார்கள். ஆகா! பிறந்த குழந்தை ''குவா குவா'' என்று அழுதபோது அந்தக் ''குவா'' சத்தத்தில் தேச வெறியும் தமிழ்ப் பண்பும் பொங்கித் ததும்பும் அழகிய தமிழ்ப் பாடல்கள் எல்லாம் அடங்கி யிருக்கின்றனவென்று யாருக்குத் தெரிந்திருக்கப்போகிறது?

பாரதியார், பிறந்த வீட்டில் சற்று நேரம் நின்று உட்கார்ந்து, அங்குமிங்கும் நகர்ந்து பலவிதத்திலும் ஏதாவது பாட்டுப் பாட வருகிறதா என்று பார்த்துவிட்டு, ஒன்றும் பயனில்லாமல் போகவே கோவில்பட்டிக்கு ரயில் வரும் நேரத்தை நினைத்துக் கொண்டு புறப்பட்டோம். ஸ்ரீமதி தங்கம்மாள் வழியிலே பாரதியாரின் தாய் மாமன் வீட்டுக்கு எங்களை அழைத்துச் சென்றார். பாரதியாருடைய தாய் மாமனின் கடைசிப் பெண் சௌ. மீனாட்சி, பாரதியார் கீதங்கள் சிலவற்றை மிகவும் இனிமையான குரலில் பாடிக் காட்டினார். அவர் பாடிய மெட்டுகள் பாரதியாரின் அசல் மெட்டுக்கள் என்று சொன்னார்கள். பாரதியாருடைய மாமா அந்தக் கீதங்களை அவரைப் போலவே பாடுவார் என்றும், அவரிடமிருந்துதான் அவருடைய குமாரி கற்றுக் கொண்டதாகவும் அறிந்தோம். நாங்கள் போன சமயம் மாமா ஊரில் இல்லை.

மீனாட்சியின் கணவருக்கு எட்டயபுரம் அரண்மனையில் உத்தியோகம் என்று அறிந்தோம். இதைப் பற்றிய பிரஸ்தாபம் வந்த போது,—பாரதியாரும் இரண்டு வருஷ காலம் எட்டயபுரம் அரண்மனையில் உத்தியோகம் பார்த்ததாகத் தெரிய வந்தது. அப்படியானால் கட்டாயம் அந்த அரண்மனையையும் பார்த்துவிட வேண்டியதுதான் என்று தீர்மானித்தேன். தலைமுறை தலைமுறையாகத் தமிழையும் சங்கீதக் கலையையும் ஆதரித்து வந்தவர்கள் எட்டயபுரம் ஜமீன் வம்சத்தார் என்று அறிந்திருந்தபடியால், அரண்மனைக்குப் போவதில் ஊக்கம் ஏற்பட்டது.

இப்போதுள்ள எட்டயபுரம் ஜமீன்தார் வயதிலே இளைஞர். ஆனால் அறிவிலே முதிர்ந்தவர். காலேஜில் படிக்காவிட்டாலும் ஆங்கிலக் கல்வி நன்கு பயின்றவர். அதோடு பயனுள்ள இன்னும் பலவிதக் கல்விகளும் பெற்றிருக்கிறார்.

அரண்மனையில் எவ்வளவோ பார்க்கத் தக்க கலைப் பொக்கிஷங்கள் இருக்கின்றன என்று அறிந்தோமானாலும், ரயிலை நினைத்துக்கொண்டு, ஜமீன்தாரிடம் விடை கேட்டோம். அப்போது அவர் போட்ட போடு என்னைத் திகைக்கச் செய்து விட்டது. ''டி.கே. சி.யிடம் கம்பன் பாடல் கேட்க வேண்டுமென்று எவ்வளவோ நாளாக எனக்கு ஆசை'' என்றார்.

அவ்வளவுதான்; எழுந்தவர்கள் திரும்ப உட்கார்ந்து விட்டோம். பாடல் முடிந்ததும் ஜமீன்தாரிடமும், எட்டயபுரத்தினிடமும் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டோம். ஸ்ரீ அமிருதஸ்வாமியும் பாரதி இலக்கிய மன்றத்து இளைஞர்களும் கோவில்பட்டி வரையில் வந்து எங்களை ரயில் ஏற்றிவிட்டார்கள்.

பாரதியார் பிறந்த எட்டயபுரத்தில் அவருடைய ஞாபகார்த்தமாக ஒரு சிறு புத்தக நிலையமாவது ஏற்படுத்த வேண்டும் என்பது எட்டயபுரத்து இளைஞர்களின் விருப்பம். அதற்கு வேண்டிய ஒத்தாசைகளை நான் செய்ய வேண்டும் என்றும், தமிழ் மக்களை அதில் ஊக்கம் கொள்ளச் செய்ய வேண்டும் என்றும் அவர்கள் ரயில் கிளம்பும்வரையில் ஓயாமல் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

இதோ என்னாலான ஒத்தாசையை நான் செய்தாகி விட்டது. இனிமேல் அந்த ஊக்கமும் உற்சாகமும் உள்ள இளைஞர்களின் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டியது தமிழ் மக்கள் — தமிழன்பர்களின் பொறுப்பு!

* இந்தச் சம்பவம் உண்மையில் நடந்ததா என்று என்னைச் சத்தியம் செய்யச் சொன்னால் செய்ய முடியாது. பாரதியாரின் பத்தினியும் சொந்த மகளும் எழுதிய வாழ்க்கைச் சம்பவங்களையே அவருடைய சீடர்கள் சிலர் மறுத்து ''அப்படி ஒன்றும் இல்லை'' என்கிறார்கள். எனவே, மேற்படி சம்பவம் உண்மையில் நடந்தது என்று நான் சத்தியம் செய்வதற்கில்லை. ஆனாலும் பாரதியார் பாடல்களில் அடங்கியுள்ள தேசபக்தி வெறியைப் பார்க்கும்போது சம்பவம் நடந்திருக்கக் கூடியதுதான் என்று தோன்றுகிறது.



# பௌலர்களின் வெற்றி பாட்ஸ்மன்களின் தோல்வி!

பி. என். சுந்தரேசன்

**முதல் டெஸ்ட்:**

※ கபில் வீசிய பந்தில் டாவ்ரே இந்திய காப்டனுக்குக் 'காட்ச்' தருகிறார்!

**ப**ம்பாய் வான்கெடே ஸ்டேடியத்தின் 'பிட்ச்', டெஸ்ட் கிரிக்கெட்டுக்கு ஏற்றதல்ல. இதனால்தான் ஐந்து நாள் நடக்க வேண்டிய மாட்ச் மூன்றரை நாட்களில் முடிந்துவிட்டது.

பந்தின் வேகமும் அது பிட்சைத் தாக்கி எழும்பிய உயரமும் வீச்சுக்கு வீச்சு வேறுபட்டது. இதனால் பாட்டிங் மிகவும் சிரமமாகியது. இந்த நிலையைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வதில் இங்கிலாந்து அணியினரை விட இந்தியர்கள் சாமர்த்தியம் காட்டினார்கள். 138 ரன்களில் வெற்றியும் பெற்றார்கள். கவாஸ்கருக்கும் அவர் தோழர்களுக்கும் ஆறு டெஸ்ட் தொடரின் ஆரம்பம் பிரமாதம்!

டாஸ் வென்றதில் கடைசியாக பாட் செய்யாமல் இந்திய அணி தப்பிவிட முடிந்தது. இதில் கவாஸ்கர் மகிழ்ச்சி அடைந்திருக்கலாம். ஆனால் முதல் தினம் மாலைக்குள் டாஸ் வென்றதில் கிடைத்த அனுகூலங்களை நமது பாட்ஸ்மென்கள் சிதற அடித்துவிட்டார்கள். 179 ரன்களில் இந்திய அணி சரிந்து விட்டது. பிட்ச் மோசமாக இருந்தது என்றாலும் பாட்ஸ்மென்களின் சரிவுக்கு அதுமட்டும் காரணமல்ல. முயற்சி, மன உறுதி இரண்டுமே நமது பாட்ஸ்மென்களிடம் காணப்படவில்லை. கிரிக்கெட் நுணுக்கங்களைக் கையாள்வதிலும் பல தவறுகள் செய்தார்கள்.

சமீபகாலமாக இந்தியாவின் பாட்டிங் கவாஸ்கரும் சௌஹானும் போடும் அஸ்திவாரத்தின் மேல் எழும் கட்டிடமாகவே அமைந்து வந்திருக்கிறது. சௌஹானை நீக்கியதற்கு எந்த விதமான நியாயமும் புலப்படவில்லை. சௌஹானுக்குப் பதில் வந்து சேர்ந்த ஸ்ரீகாந்துக்கு இரட்டை சவால்கள். மிகப் பெரிய பம்பாய் ரசிகர் கூட்டத்தின் முன்னால் முதன் முதலாக டெஸ்ட் அரங்கில் நுழைந்தார் என்பதோடு சௌஹானுக்குப் பதில் தாம் ஆடுவதை நியாயப்படுத்த வேண்டிய நிர்ப்பந்தமும் அவருக்கு இருந்தது. அவர் தம் பணியில் படுதோல்வி அடைந்தார். ஒரு நாள் மைதானத்தில் ஃபீல்ட் செய்த பிறகு, டெஸ்ட் அரங்கம் சற்றுப் பழகிய பிறகு இரண்டாவது இன்னிங்ஸில் அவர் இலகுவாகவே ஆடினார். ஆனால் தமது விக்கெட்டை முட்டாள்தனத்தால் இழந்தார். பந்தை ஆடிய பிறகு கிரீஸுக்கு வெளியே அசட்டுத்தனமாக நடமாடியதில் ரன் அவுட் ஆனார்.

முதல் இன்னிங்ஸின் ஆரம்பத்தில் வீழ்ச்சியுற்ற இந்திய அணி, பிறகு எழுந்திருக்கவே யில்லை. கபில்தேவ்தான் புழுக்கத்தினிடையில் தென்றலாக ஆடி 38 ரன்கள் எடுத்தார். கவாஸ்கர் 55 ரன்கள் எடுத்திருந்தபோதிலும் அவர் நாம் அறிந்திருக்கும் சாம்பியனாகச் செயல்படவில்லை.

ஆஃப் ஸ்டம்ப் மீதும் அதற்குச் சற்று அப்பாலும் போதம் வீசிய பந்துகளை ஆட அவர் திணறினார். கடைசியில் விக்கட் கீப்பருக்கு ஒரு காட்ச் கொடுத்து போதமுக்கே தமது விக்கெட்டைப் பரிசளித்தார். எத்தனையோ சாதனைகளைக் கண்டுள்ள கவாஸ்கருக்கு இப்போது போறாத காலம் போலும்! அவர் தமது முழு ஆற்றலையும் சீக்கிரமே திரும்பப் பெறுவார் என நம்புவோம். சந்தீப் பட்டீலுக்கும் மதன் லாலுக்கும் ஏற்பட்டவை மட்டும் துரதிர்ஷ்டவசமான தோல்விகள் என ஏற்கலாம். போதமின் ஒரு தாழ்வான பந்துக்கு முன்னவர் எல்.பி. டபிள்யூ ஆனார்; பின்னவர் நாற்பது வயதான டெய்லரின் ஒரு அபாரமான காட்சுக்கு இரையானார்.

இந்திய இன்னிங்ஸ் நெடுகிலும் போதம் துளிக்கூட சோர்வடையாமல் பந்து வீசி வந்தது அவருக்கிருந்த சக்தியை மட்டுமின்றி ஆற்றலையும் உணர்த்தியது. இருவிதமான ஸ்விங்கர்களையும் கட்டுப்பாட்டுடன் பிரயோகித்தார்; இடையிடையே கட்டர்களை அனுப்பினார்.

பாய்காட்டும் டாவ்ரேயும் நன்கு காலூன்றிக் கொண்ட பிறகும் துரித கதியில் ரன்கள் எடுக்காமலிருந்தது தவறாக முடிந்து. இங்கிலாந்து அணியின் வீழ்ச்சிக்குக் காரணமாயிற்று. பாய்காட் பெவிலியனுக்குத் திரும்பிய பிறகு இந்திய பௌலர்கள் அடுத்தடுத்து பலமான அடி கொடுத்து 166 ரன்களில் எல்லா விக்கெட்டுகளையும் சுருட்டிக்கொண்டார்கள். பெரும்பாலான இங்கிலாந்து பாட்ஸ்மென்கள் அமெச்சூர் ஆட்டக்காரர்களைப்போல் நடந்து கொண்டனர். சந்தேகாஸ்பதமான பிட்சில் ஆடும்போது ஸ்வீப் செய்வது ஆபத்து என்பதைக் கூட மறந்துவிட்டிருந்தார்கள். அவர்களுடைய இந்த

✖ ஐந்து விக்கெட்கள் எடுத்த மதன்லால்





○ ஐந்து விக்கெட்கள் எடுத்து வெற்றிக்கு வித்திட்ட கபில்தேவ்.

பலவீனத்தை திலிப் தோஷி தமக்குச் சாதகமாக நன்கு பயன்படுத்திக் கொண்டார். அவரது குறிபார்க்கும் ஆற்றலும் பந்தைக் கட்டுப்படுத்தும் திறனும் அனைவரும் அறிந்ததே. 39 ரன்கள் மட்டுமே தந்து ஐந்து விக்கெட்டுகளை வீழ்த்தினார்.

இந்தியாவின் இரண்டாவது இன்னிங்ஸ், கவாஸ்கர், ஸ்ரீகாந்த், பட்டீல்; வெங்ஸர்க்கார் ஆகிய அனைவரையும் இழந்து தடுமாறிக் கொண்டிருந்தது. ஆனால் விஸ்வநாத் இங்கிலாந்து போலர்களின் மரணப் பிடியை உடைத்தெறிந்து தமது முதல்தரமான பாணியில் ஆடினார். 'ஆட்டத்தின் அப்போதைய நிலை என்ன? பந்து வீசுவது யார்?' போன்றவையெல்லாம் தம்மைப் பாதிக்க விஸ்வநாத் என்றுமே அனுமதிப்பதில்லை. அவற்றைப் பற்றிக் கவலையே படாமல் தமக்கு இயல்பாக உள்ள ஆற்றலுடன் ஆடுவார். இதுவே அவரது பலம். ஆனால் அவருக்கு ஒரு பலவீனமும் உண்டு. ஒரு பெரிய எண்ணிக்கைக்கு அஸ்திவாரமிட்டுத் தயாராகிவிட்ட நிலையிலும் கருத்தூன்றி ஆடத் தவறி விடுவார். இது அவர் கிரிக்கெட் வாழ்க்கை முழுவதும் அவரிடம் ஒட்டிக் கொண்டு வந்துள்ள குறைபாடு. அது இப்போதும் அவரை அடித்து வீழ்த்தி 37 ரன்களுக்கு பெவிலியனுக்குத் திருப்பி அனுப்பிவிட்டது. ஆயினும் அவர் ஆட்டமும் ரன்களின் எண்ணிக்கையும் அடுத்து வந்த ரவி சாஸ்திரிக்கும் கபில்தேவுக்கும் நிலைமையை வசதியான ஒன்றாக்கி விட்டிருந்தன. கபில்தேவ் கவலைப் படாமல் பந்தைத் தாக்கி 46 ரன் எடுக்க முடிந்தது. ரவி சாஸ்திரி பந்து வீச்சில் மட்டுமின்றி பாட்டிங்கிலும் கெட்டிக்காரர் தான்.

இறுதியில் இந்தியாவின் ஸ்கோர் 227க்கு உயர்ந்தது. போதமுக்கு இந்த இன்னிங்ஸில் மேலும் ஐந்து விக்கெட்டுகள்.

இங்கிலாந்து இரண்டாவது இன்னிங்ஸ் தொடங்கியபோது யாருக்கு வெற்றி கிட்டும் என்பதை நிர்ணயிக்க முடியாத சூழல் தான் நிலவியது. ஆனால் வெகு சீக்கிரமே கபில்தேவ் இந்திய அணிக்கு வெற்றி வாய்ப்பு அதிகரிக்குமாறு செய்து விட்டார். கூச், டாவ்ரே, கோவர் ஆகியவர்களை அடுத்தடுத்து வெளியேற்றினார். மதன்லாலுக்கு கபில்தேவின் அறிவுரை கொஞ்சம் கிடைத்தது. அதன் பிறகு ஸ்டம்புகளைத் தாக்குவதில் அவர் கவனம் கூர்மையடைய பாய்காட், ஃபிளெட்சர், எம்பூரி ஆகியவர்களை அடுத்தடுத்து உள்ளே அனுப்பினார். பாய்காட்டும் ஃபிளெட்சரும் கொஞ்சம் கூட மேலெழும்பாத பந்துகளை ஆடப்போய் எல்.பி.டபிள்யூ. ஆனது பெரும்துரதிர்ஷ்டம். ஒன்பது விக்கெட் நஷ்டத்துக்கு இங்கிலாந்து 75 ரன்களை எடுத்திருந்தபோது இந்திய வெற்றி உறுதியாகி யிருந்தது. ஆயினும், அண்டர்வுட்டும் வில்லிஸ்ஸும் கடைசி விக்கெட் விழுமுன்னர் விடாப் பிடியாகப் போராடியது நமது நெஞ்சை நெகிழ்விப்பதாக இருந்தது.

கபில்தேவும் மதன்லாலும் ஆளுக்கு ஐந்து விக்கெட்டுகள் எடுத்து இந்திய அணியின் ஹீரோக்களாகத் திகழ்ந்தனர்.

மாட்ச் முடிந்த பிறகு கவாஸ்கர் சொன்னார்: ''எனது போலர்கள் வெற்றி தேடித் தந்தார்கள்; இனியேனும் பாட்ஸ்மென்களாகிய நாங்கள் எங்கள் பணியைச் செவ்வனே செய்ய வேண்டும்!''

இதையே ஃபிளெட்சரும் எதிரொலிப்பது போல் பேசியிருந்தால் அதில் தவறில்லை. 'எனது போலர்கள் பெற்றுத் தந்த வெற்றி வாய்ப்புக்களை பாட்ஸ்மென்கள் சிதற அடித்து விட்டார்கள்' என்று அவர் கூறியிருக்கலாம்.

ஆங்கிலத்திலிருந்து
தமிழாக்கம் : குட்டிகிருஷ்ணன்

---

## புதுப் பிறவி!

அன்று தைப் பொங்கல். புது நைலக்ஸ் புடவையை உடுத்தி தன்னை அழகுத்தேவதையாக்கிக் கொண்டிருந்தாள் என் மகள்.

அன்று அவள் சினிமாவுக்குப் போகும் அவசரத்தில் சிநேகிதிகளை வாசலில் நிற்க வைத்துவிட்டு, தாத்தாவுக்கும் பாட்டிக்கும் பால் காய்ச்சி வைத்து விட்டுப் போக வேண்டும் என்று சக்கரம் போல் சுழன்றாள்.

திடீரெனப் பற்றிக் கொண்ட ஸ்டவ்வின் கெரசின் சிதறிப் புடவை மீதெல்லாம் தெறித்ததால் தீ வேகமாய் அவள் புடவையில் படர்ந்தது.

தீப்பட்டெரியும் அதிர்ச்சியில் அவள் தெருவுக்கு ஓடினாள். அந்தக் காட்சியைக் கண்ட ,பிரமிப்பில் சிநேகிதிகள் முன் பின் யோசியாமல் தண்ணீரை எடுத்து அவள் மீது கொட்டினார்கள். காரியம் விபரீதமாக மாறியது. அலறித் துடித்துக் கொண்டிருந்த மகள் உடனே 'டாக்ஸி' மூலம் அரசாங்க மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டாள். பெரும் செலவுக்குப் பிறகு ஒரு பயனுமின்றி என் கண்மணி என்னை விட்டுப் பிரிந்தே போய் விட்டாள்.

ரத்தக் கொதிப்பு வியாதிக்கு முன்பே சரணாகதியாகிவிட்டிருந்த என் தந்தையார் பேத்தியின் மரணச் சம்பவம் கேட்டுத் துடித்து, அவளைத் தொடர்ந்தே போய்விட்டார்.

தந்தையார் பிரிந்த பதினோராம் நாள் நிரந்தரமான தூக்கத்தில் என் தாயும் ஆழ்ந்து விட்டாள்.

கடந்த காலத்தின் சோக நிகழ்ச்சிகள் என்னைப் பலவீனமுள்ள மனிதனாக்கி நாளுக்கு நாள் சிறுகச் சிறுகக் கொன்று கொண்டே வந்தன. என் சகோதரன் பன்னீர் ஒருமுறை ஆறுதலுக்காக எடுத்துரைத்த பாரதியாரின் பாடல்தான் எனக்கு ஆத்மீக பலத்தைத் தந்தது.



'சென்றது இனி மீளாது மூடரே! நீர்
எப்போதும் சென்றதையே சிந்தைசெய்து
கொன்றழிக்கும் கவலையெனும்குழியில்வீழ்ந்து
குமையாதீர்! சென்றதனைக் குறித்தல்
வேண்டாம்
இன்றுபுதிதாய்ப் பிறந்தோம் என்று நீவிர்
எண்ணமதைத் திண்ணமுற இசைத்துக்
கொண்டு
தின்றுவிளையாடி இன்புற்றிருந்து வாழ்வீர்
தீமையெலாம் அழிந்துபோம் திரும்பி
வாரா.

-அறிவுச் சுடர்



**கண்ணன் என் காதலன் - 3**

கண்ணா! வேடனெங்கு போனான்!-உனைக்
கண்டே யலறி விழுந்தானோ?-மணி
வண்ணா! என தபயக் குரலில்-எனை
வாழ்விக்க வந்த அருள் வாழி

-பாரதியார்

கோவிலிலிருந்து திரும்பியபோது வரதன் பதற்றத்துடன் வந்தார். குங்குமம், தேங்காய் பிரசாதங்களைத் தட்டோடு மேஜைமேல் வைத்துவிட்டு ''லக்ஷ்மி! லக்ஷ்மி!'' என்று கூவினார்.

''என்ன?'' லக்ஷ்மி விரைந்து வந்தாள்.

''சேதி தெரியுமோ? நம்ம சுரேஷ் ஒரு வாரமா கண்ணைத் திறக்காம ஜுரத்தில படுத்திண்டிருக்கானாம். பம்பாய் பூரா இப்ப ஏதோ வைரஸ் பரவி யிருக்காம். குழந்தைக்கும் வந்துடுத்து.''

பம்பாயில் கணவனோடு குடும்பம் நடத்தும் நளினியின் ஐந்து வயதுக் குழந்தை நோய்வாய்ப்பட்டிருப்பதைக் கேட்டதும் லக்ஷ்மியும் கலங்கிப் போனாள்.

''என்னது?குழந்தை படுத்திண்டிருக்கானா? நளினி எழுதவேயில்லையே! எப்படித் தெரியும் உங்களுக்கு?''

''இப்போ கோவில்ல என் ஃப்ரெண்ட் ரங்காச்சாரியைப் பார்த்தேன். பிள்ளைக்கு ஸ்டேட் பாங்கில் வேலை ஆயிட்டதுக்காக அநுமாருக்கு வடைமாலை சாத்த வந்திருந்தார். அவர்தான் சொன்னார். பம்பாய்க்குப் போயிருந்தாராம். முந்தாநாள் நம்ம நளினியைப் போய்ப் பார்த்தாராம். குழந்தை படுத்திண்டிருக்கிறதா அவ சொன்னாளாம்.''

ஒரு கணம் அசையாமல் நின்ற பிறகு லக்ஷ்மி திடமாய்க் கூறினாள். ''எனக்குத் தோணலே. அத்தனை ஜாஸ்தியா இருந்தா நளினி நமக்குத்தெரிவிக்காமலேயா இருப்பா? அவ என்ன சொன்னாளோ, இந்த மனுஷர் என்ன அர்த்தம் பண்ணிண்டு வந்தாரோ!''

''உனக்கு எல்லாத்திலேயும் குதர்க்கம் தான். எனக்கென்னவோ இது தெய்வ குத்தம்னு தோணறது.''

லக்ஷ்மி ஏறிட்டுப் பார்த்தாள்.

''போன வருஷம் நடந்த ரயில் விபத்துல அவாள்ளாம் சிக்கிண்டபோது சுரேஷுக்குக் கண்ணுல அடிபட்டு ஆபத்தான நிலைக்குப் போயிருந்ததே அப்போ நான் என்ன வேண்டுதலை பண்ணிண்டேன்னு நினைவிருக்கா? குழந்தையின் கண்ணைக் காப்பாத்திக் குடுத்தா திருப்பதிக்கு வந்து வெள்ளிக் கண் வாங்கிப் போடச் சொல்றேன்னு பெருமாளைப் பிரார்த்தனை பண்ணிண்டேன். குழந்தைக்கும் கண் பார்வை தப்பிச்சுது. நளினிக்கும் மாப்பிள்ளைக்கும் விஷயத்தைச் சொன்னேனே, அவா உடனே போய்ப் பிரார்த்தனையைச் செலுத்த வேணுமா? போறோம் போறோம்னு தள்ளிப் போட்டுண்டே வந்தா. செலவைப் பார்க்கறவா இல்லே. சோம்பல்தான். அதுக்காக சுவாமி காரியத்தை எத்தனை காலம் ஒத்திப் போடறது? இதோ, இப்போ குழந்தை மறுபடியும் படுத்துடுத்து. தெய்வ கோபம் சும்மா போகுமா? யாரோட வினையாடறதுன்னு இல்லையாதா?''

# வாழ்விக்க வந்த அருள் வாழி!



ஆர். சூடாமணி



லக்ஷ்மி எதுவும் பேசவில்லை.

''ஏதானும் சொல்லேன்'' என்றார் வரதன் ஆத்திரத்துடன்.

''என்ன சொல்றது? முதல்ல பெருமாளை 'நீ எனக்கு இதைக் குடு. பதிலுக்கு நான் உனக்கு அதைப் பண்றேன்' அப்படின்னு பேரம் செய்யக் கூடிய வியாபாரியாய் ஆக்கினேள். அடுத்தபடி, 'என் கடனைத் திருப்பிக் குடுக்கப் போறியா இல்லையா'ன்னு வாசல்ல வந்து நின்னு கோபமாய் மிரட்டற சட்டிக்காரனாய் ஆக்கினேள். இதெல்லாம் மனுஷ அளவுக்குக் கடவுளை இறக்கற காரியம் தானே? கடவுளை ஒரு நபர்னு நினைக்கிறதனால தானே இந்த மாதிரி எண்ணங்கள் வரது?''

''இருக்கட்டுமே! என்வரைக்கும் கடவுள் நபர்தான். 'பர்ஸன்'தான். மனுஷனின் குறையைக் கேட்டு நிவர்த்தி பண்றவர். போன வருஷம் விபத்துக்குள்ளான அந்த ரயிலில் பிரயாணம் பண்ணின நம்ம பெண்ணையும் மாப்பிள்ளையையும் பேரக் குழந்தையையும் உயிரோடு காப்பாத்திக் குடுத்த கருணாமூர்த்தி.''

''அந்த விபத்துல முப்பத்தெட்டுப் பேர் செத்துப்போனா. ஆனாலும் நம்ம மனுஷா தப்பிச்சதால் கருணாமூர்த்தியா? நமக்கு சந்தோஷம்னு மட்டும் சொல்லுங்கோ, ஒத்துக்கறேன்.''

''நீ எப்பவுமே நாஸ்திகவாதிதானே.''

அவர் வேகமாய்த் தமது பூஜைஅறைக்குச் சென்றார். தெய்வப் படிமங்களின் முன் உட்கார்ந்து கண்களை மூடிக் கொண்டார்.

'நாராயணா! ஏழுமலையானே! கோபத்தை விடு. என் பேரனுக்கு உயிர்ப் பிச்சை தா. அவன் பெற்றோர் செய்வதற்காக இனியும் காத்திராமல் நானே உடனடியாய் உன் மலைக்கு நடந்தே வந்து உனக்கு வெள்ளிக் கண் காணிக்கை செலுத்தி வேண்டுதலையை நிறைவேற்றுகிறேன்.''

லக்ஷ்மி அவரது இயான வடிவைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டு நின்றாள். உள்ளே ஒரு சோகம் அழுத்தியது. அவள் தந்தை அவளுக்குக் காட்டியிருந்த இறைத் தத்துவமே வேறு...

சுரேஷ் உடல்நிலை இப்போது எப்படி இருக்கிறதோ? திடீரென்று என்ன நோய்? ஏன்? ஐயோ, குழந்தைக்கு ஒன்றும் ஆகாமல் இருக்க வேண்டுமே... கவலைக்கிடமாய் இருந்தால் நளினி எழுதாமலா இருப்பாள்!

லக்ஷ்மி வாசலுக்கு வந்தாள். 'கேட்'டுக்கு வெளியே தெருவைத் தாண்டி எதிர்ப்புறம் பஸ் நிலையம். சுமார் இருபது வயது மதிக்கக் கூடிய ஒரு வாலிபனை ஐந்தாறு வயதுப் பெண் குழந்தை ஒருத்தி கையைப் பிடித்து மெதுவாக நடத்தி வந்து அந்த பஸ் ஸ்டாண்டில் விட்டுவிட்டுத் திரும்பிச் சென்றாள். இது பல நாட்கள் இந்த மாலையில் இந்த நேரத்தில் தென்படுகிற காட்சி. அந்த வாலிபன் ஒரு கையில் வெள்ளைத் தடி பற்றியிருந்தான். அருகில் இருந்த ஏதோ ஒரு இடத்துக்கு அடிக்கடி வருகிறான் என்பது புரிந்தது. சிறுமியும் இந்த வட்டாரத்தைச் சேர்ந்தவளாகவே இருக்க வேண்டும். கண் பார்வையற்ற அந்த



## ஜாதிகள் இல்லையடி பாப்பா

சில வருஷங்களுக்கு முன் கோஷா ஆஸ்பத்திரியில் எனக்கு இரண்டாவது பிரசவமாகி, பெண் குழந்தை பிறந்து நான்கு நாட்களாகியிருந்தன. அதே வார்டில் ஒரு அரிசனப் பெண்ணுக்கும் பிரசவமாகிப் பெண் குழந்தை பிறந்து இரண்டு நாளாகியிருந்தன. எனக்கு இரண்டு படுக்கை தள்ளி அவள் படுத்துக்கொண்டிருந்தாள். அவள் குழந்தை சதா வாய் மூடாமல் கத்திக் கொண்டே இருந்தது. எல்லோருக்கும் தொல்லையாகஇருந்தது.

'ஏம்மா, குழந்தைக்குப் பாலைக்கொடுத்துத் தூங்க வைக்கக் கூடாதா? நாங்களும் கொஞ்சம் தூங்க வேண்டாமா?' என்றார்கள்.

பாவம்! அரிசனப் பெண் என்ன செய்வாள்? அவளுடைய உலர்ந்துபோன மார்பகத்தில் பாலே சுரக்கவில்லை. அதற்குப் பதிலாய் அவள் கண்களில் கண்ணீர் ஆறாகப் பெருகி ஓடியது. அவள் எல்லோருடைய கடுஞ்சொல்லையும் கேட்டுக்கொண்டு மௌனமாக அழுது கொண்டிருந்தாள்.

நர்ஸ் அந்தப் பக்கம் வரும்போது சர்க்கரை ஜலம் எடுத்துப் பாலாடையில் போட்டுவிட்டுப் போவாள். அவள் சிறிது தூரம் கூடப் போயிருக்க மாட்டாள், குழந்தை கதற ஆரம்பித்து விடும். பால் பவுடர் வாங்க அந்த ஏழைப் பெண்ணிடம் காசில்லை.

''என்னிடம் தாய்ப் பால் நிறைய இருக்கு. அந்தக் குழந்தைக்கும் கொடுக்கிறேன்'' என்றேன் நர்ஸிடம்.

''நீ பாப்பார ஜாதி, அது அரிசனம். தெரியுமா?'' என்றாள் நர்ஸ்.

''பரவாயில்லை. சீக்கிரம் குழந்தையைக் கொண்டுவா'' என்றேன்.

குழந்தையை மார்போடு அணைத்துப் பால் ஊட்டினேன். குழந்தை நன்றாய் அனுபவித்துச் சுவைத்து முட்ட முட்டக் குடித்தது. கண்ணயர்ந்தது.

அந்தத் தாய் என்னைத் தெய்வமாக நினைத்துக் கைஎடுத்துக் கும்பிட்டாள்.

அப்பொழுது என் மனத்தில் பாரதியாரின் பாப்பா பாட்டு ஞாபகத்துக்கு வந்தது.

''உயிர்களிடத்தில் அன்பு வேணும்—தெய்வம்
உண்மையென்று தானறிதல் வேணும்.''

-சாரதா சுப்பிரமணியம்



## 3 மாதத்திற்குப் போதுமான இரும்புச்சத்துடன் குழந்தை பிறக்கிறது



# 3 மாதம் ஆனபின், குழந்தைக்குத் தேவையான இரும்புச்சத்து பாலில் மட்டுமே கிடைப்பதில்லை.

இரும்புச்சத்து அதிகமுள்ள **:.பாரெக்ஸ்** கொடுங்கள்

"தாயிடமிருந்து ஏராளமான இரும்புச் சத்தைப் பெற்று குழந்தை பிறக்கிறது. பிறந்த பிறகு மெல்லமெல்ல இரும்புச் சத்தின் அளவுக் குறையத் தொடங்குகிறது. பால் நல்ல உணவாயிருப்பினும் இரும்புச் சத்துப் பற்றுக் குறையினால் அது முழுமையாவதில்லை. ஆகவே, குழந்தைக்கு இரும்புச் சத்து அடங்கிய திட உணவுத் தேவைப் படுகிறது."

—Dr. Subhash C. Arya "Infant & Childcare for the Indian mother"

**டாக்டர்கள் :.பாரெக்ஸ் சிபாரிசு செய்யக் காரணம்?**

குழந்தைக்கு திட உணவைத் துவங்குவதற்கு தனிப்படத் தயாரிக்கப் பட்டது :.பாரெக்ஸ்—குழந்தையின் இளம் ஜீரண சக்திக்கு ஏற்ப பக்குவம் செய்யப்பட்டது. இதில் விரைந்த வளர்ச்சிக்கான புரதச் சத்து; சக்திக்கான கார்போஹைட்ரேட், கொழுப்பு; எலும்புகளை திடமுடனும் பற்களை பலமுடனும் வளரச் செய்திடப் போதுமான கால்ஷியம், பாஸ்பரஸ், வைட்டமின்கள் உள்ளன. குழந்தையின் இரத்தத்திற்கும் உடல் ஆரோக்கியத்திற்கும் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் அவசியமான இரும்புச் சத்தும் ஏராளமாக அடங்கியது—:.பாரெக்ஸ்.






**டாக்டர்கள் சிபாரிசு செய்வது :.பாரெக்ஸ்**
**குழந்தையின் விரைந்த முழுவளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு**

CASGLF-30-203 TAM

எல்லாத் துணி
களையும் துவைக்க
'கீ' டிடர்ஜெண்ட் பவுடரை
விட மிகச்
சிறந்தது எது?



# புதிய! மேன்மையான




# கீ

அது
மாத்திரமில்லை
இதர முக்கியமான
டிடர்ஜெண்டுகளை
விட
30% விலை
குறைவானது.

CHAITRA-G-161 TAM

அதன்
மேன்மையைப் பாருங்கள்



இப்பொழுது 'கீ'யில்
மிகையான நுரைவளம்
பொங்குகிறது.



இப்பொழுது 'கீ' துணிகளை
மிகையான வெண்மையுடனும்
பளபளப்புடனும்
சுத்தம் செய்கிறது.

கோத்ரெஜ்
தயாரிப்பு

**புதிய மேன்மையான 'கீ' யில் – அதிக
வெண்மையும் பளபளப்பும் காண்பீர்.**



## அச்சமும் பேடிமையும்



எங்கள் ஊரில் படித்துவிட்டு வேலை இல்லாமல் இருக்கும் இளைஞர்கள் சேர்ந்து ஒரு குழு அமைத்து இரவில் ரோந்து சுற்றி வர ஏற்பாடு செய்தார்கள்.

இரண்டு மாதங்களுக்கு முன்னால் ஒரு நாள் இரவு 11 மணிக்கு மேல் நாலு இளைஞர்கள் கொண்ட குழு ஒன்று ரோந்து கிளம்பியது. ஒரு சந்தின் துவக்கத்திலிருந்து திடீரென்று ''ஐயோ, ஐயோ காப்பாற்றுங்கள், உதவி, உதவி'' என்று, குரல் வந்தது. இளைஞர்கள் நால்வரும் அங்கு விரைந்தனர். அங்கு ஓர் ஆள் 50 வயதிருக்கும். ஒரு பெண்ணைப் பலாத்காரம் செய்யப் போக, அவனுக்கும், அப்பெண்ணின் கணவன், மைத்துனர் ஆகியோருக்கும் இடையில் பலத்த கைகலப்பு. அந்த ஆள் நல்ல குடி போதையில் இருந்தான். இளைஞர்கள் நால்வரும் அவர்களை விலக்கி, பின் ஒரு புகார் மனு எழுதி, அப்பெண்ணின் கையெழுத்துடன் அந்த ஆளையும் அழைத்துக்கொண்டு போய் போலீஸில் ஒப்படைத்தனர்.

அதன் பிறகு நேராக எங்கள் வீட்டுக்கு வந்து என் கணவரை எழுப்பி விவரம் சொன்னார்கள் இளைஞர்கள். அந்த இளைஞர் குழுவை நிர்வகிக்கும் தலைமைப் பொறுப்பு ஏற்றிருந்தவர்களில் என் கணவரும் ஒருவர். எனவே காலை 9 மணியளவில் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கிளம்பினார் என் கணவர். அவரை நான்கைந்து ஊர்ப் பெரிய மனிதர்கள் வழி மடக்கி, ''சார்! நீங்கள் போலீஸ் ஸ்டேஷன் போகவேண்டாம். புகார் வாபஸ் பெறப்பட்டு விட்டது'' என்றார்கள்.

என் கணவருக்கு விவரம் ஒன்றும் புரியவில்லை. அந்த இளைஞர்களும், என் கணவரும் சென்று பாதிக்கப்பட்ட பெண்ணின் கணவரை விசாரித்தனர். அவர் சொன்னார்: ''சார், அந்த ஆள் ஊரின் பழைய சாராயக் கடைத்தலைவராம். குடி போதையில் அப்படிச் செய்து விட்டாராம். இனி அப்படி நடக்காமல் பார்த்துக் கொள்கிறோம் என்றும் புகாரை வாபஸ் வாங்கிக் கொள்ளும்படியும் வந்து கேட்டார்கள். இந்த ஊருக்குப் புதுசு. பிழைக்க வந்திருக்கிறோம். நாளைக்கு இவர்களால் வம்பு வரக்கூடாது பாருங்கள்!''

''அச்சமும் பேடிமையும் அடிமைச்சிறுமதியும்
உச்சத்தில் கொண்டாரடி — கிளியே
ஊமைச் சனங்களடீ — கிளியே
ஊமைச் சனங்களடீ''

என்று வயிற்றெரிச்சலுடன் கத்தினார் பாரதி பக்தரான என் கணவர்...

—எஸ். கோகிலா

வாலிபனைக் கையைப் பிடித்துப் பத்திரமாய் பஸ் ஸ்டாண்டுக்கு அழைத்து வந்து விட்டு விட்டுப் போவது எப்போதும் அந்தக் குழந்தைதான்.

அக் காட்சியைப் பார்த்துக் கொண்டே லக்ஷ்மி நெகிழ்ந்து நின்றாள். நெஞ்சில் ஒரு புனித உணர்வு ததும்பியது. உண்மையாகவே உலகம் இறைவனின் சரீரமாகத் தெரிந்தது.

அவளையா நாஸ்திகவாதி என்கிறார்! கடவுளே கருணை என்கிறார் அவர். கருணையே கடவுள் என்கிறான் இவன். உண்மையில் அதன் அடிவேர் இதுதான் என்பது புரியவில்லையா அவருக்கு?

''லக்ஷ்மி!''

''இதோ வந்து விட்டேன்.''

தாம் இப்போது செய்துகொண்ட பிரார்த்தனையின் விவரத்தை வரதன் அவளுக்குச் சொன்னார்.

'நான் நாளைக்கே திருப்பதிக்குக் கிளம்பறேன். அந்த வேண்டுதலையை முடிக்காம எனக்கு இருப்புக் கொள்ளாது.''

''அவசரப்படாதீங்கோ. எப்படியும் நீங்க வேண்டுதலைச் செலுத்திடலாம். அதுக்கு முந்தி குழந்தைக்கு எப்படி இருக்குன்னு தெரிஞ்சப்பறமே! மனசு கிடந்து அடிச்சுக்கறது.''

''போறது. உனக்குத் தெய்வத்தின் கிட்ட நம்பிக்கை இல்லாட்டாலும் பேரன் கிட்ட பாசமானும் இருக்கே!''

லக்ஷ்மி மௌனமாய் உள்ளே போனாள்.

'அப்பா!' — லக்ஷ்மி மனத்துள் அப்பாவை அழைத்தாள். மனத்துள் ஜெனரல் ஆஸ்பத்திரி அறை தெரிந்தது. அதில் படுத்திருந்த அப்பாவின் முகம் தெரிந்தது. அத்தனை நோவிலும் அம்முகத்தில் துலங்கிய சாந்தி தெரிந்தது.

நோய்க்கான பரிசோதனைகள் முடிந்துவிட்டன. ரிப்போர்ட் வரவேண்டும். 'கான்ஸர் இல்லை' என்று ரிப்போர்ட் வருவதற்கு அம்மா அனவரதமும் நாராயணனைப் பிரார்த்திக்கிறாள். உபவாசம் இருந்து நோன்பு நோற்கிறாள். கோயில்களுக்கு நேர்ந்துகொள்கிறாள்.

'கான்ஸர்' என்று முடிவு தெரிகிறது. அம்மா அழுது புரள்கிறாள். கடவுளைச் சபிக்கிறாள். அப்பாவின் புன்சிரிப்பு மாறவில்லை. யுவதியான மகளிடம் சொல்கிறார்:

''லக்ஷ்மி! உன் அம்மா கடவுள் தத்துவத்தை எத்தனை குறுகலாய்ப் புரிஞ்சுண்டிருக்கா பார்த்தியா? நம்ம உயிரைக் காப்பாத்தறதும் நாம கேட்டதைக் கொடுக்கறதும்தான் கடவுளா? நிஜமான பக்தி இருந்தா இதுதான் தெய்வ சித்தம்னு ஏத்துக்க வேணுமா? மேலும் மனுஷ உயிர்சாசுவதமா?

---

இப்போ எனக்குக் கான்ஸர் இல்லேன்னு நான் சிரஞ்சீவியாய் வாழப் போறேனா? அதைக் கொண்டா கடவுளை எடை போடறது? சாவு இயற்கையைச் சேர்ந்தது. நன்மை - தீமை, சுகம் - துக்கம், வாழ்வு - மரணம், இப்படி எல்லாத்தையும் உள்ளடக்கினதுதான் இயற்கை. கடவுள் என்கிறது இயற்கையை மாத்தறது இல்லேம்மா, இயற்கையை உண்டாக்கறது. ஏன்னா அது ஒரு நபர் இல்லே, ஒரு பர்ஸன் இல்லே. கடவுள் என்கிறது பிரபஞ்ச சக்தி. அதை அப்படிப் புரிஞ்சுக்கிறதுதான் இயற்கை உணர்வு. அதுக்காகத் தீமையோடு ஒத்துப் போகணும்னு அர்த்தமில்லே. நம்மவரைக்கும் நன்மையை நினைக்கணும், செய்யணும்.''

லக்ஷ்மி மறக்கவில்லை. அந்த மறவாமை தொடங்கிய விதம்: தகப்பனாரின் வாரிசுகளில் ஒருத்தியாகத் தனக்குக் கிடைத்த சொத்தின் பங்கை அப்படியே செஞ்சிலுவைக் கழகத்துக்கு வழங்கினாள்.

நினைவு மீண்டது. சுரேஷ்! குழந்தைக்கு எப்படி இருக்கிறதோ?

மறுநாள் ஞாயிற்றுக் கிழமை.

நளினிக்குக் கடிதமெழுதி விசாரிக்கலாமா? அண்ணாசாலை தலைமை அலுவலகத்தில் போஸ்ட் செய்யலாம். அல்லது தந்தியடித்தால்?

ஏன், ட்ரங்கால் போட்டுவிடலாமே? உடனடியாகத் தகவல் தெரிந்துவிடும்.

இரண்டு முறை முயன்றார்கள். லைன் கிடைக்கவில்லை. தவிப்பு, பதற்றம். வரதனின் உதட்டு முணு முணுப்பில் பிரார்த்தனை, வேண்டுதலை.

கடைசியில் இன்னும் ஒரு மணி நேரத்தில் தொடர்பு கிடைக்கலாமென்ற நம்பிக்கையில் இருவரும் டெலிபோன் அருகிலேயே உட்கார்ந்திருந்தார்கள். வாசலில் நிழல் தட்டியது. வரதனின் இரு நண்பர்கள். விடுமுறை 'விஸிட்டிங்'.

''அட கடவுளே! சமயம் பார்த்து இப்பத்தானா.... நான் அவாளை அழைச்சுண்டு மாடிக்குப் போறேன் லக்ஷ்மி. எக்ஸ்சேஞ்சிலேர்ந்து 'கால்' வந்தா நீ கவனிக்கிறயா?''

''ம்.''

கடிகார முட்கள் யுகங்களிடை நகர்ந்தன.

கடைசியில் ஒருவாறு டெலிபோன் மணி... லக்ஷ்மி உதட்டைக் கடித்துக் கொண்டு கை நடுங்க போனை எடுத்தாள். பம்பாய்க்குத் தொடர்பு கிடைத்து நளினியோடு பேச முடிந்ததும் தாபம் வெடித்தது. ''சுரேஷுக்கு உடம்பு இப்போ எப்படி இருக்கு?''

''எல்லாம் சரியாய்ப் போயிடுத்தே!''

லக்ஷ்மி நிம்மதியில் துவண்டு போனாள். பிறகு இருவரும் பேசிக் கொண்டார்கள்.

நண்பர்களை விடை கொடுத்து அனுப்பிய பின் வரதன் ஆவேசமாய் ஓடிவந்து. ''என்ன'' என்றார் மனைவியிடம். நாக்கு அதற்கு மேல் புரளவில்லை.

''நல்ல சேதிதான். குழந்தைக்கு இப்போ உடம்புக்கு ஒண்ணுமில்லேயாம். சௌக்கியமாய் இருக்கானாம். ஜுரமெல்லாம் சரியாய்ப் போயிடுத்தாம்.''



''பகவானே, எல்லாம் உன் கருணை!'' வரதன் கைகளைத் தலைக்கு மேல் தூக்கிக் குவித்தார். கண்களில் ஆனந்த நீர் துளித்தது. ''என் பிரார்த்தனை பலிச்சுடுத்து லக்ஷ்மி! நாளைக்கே திருப்பதிக்குக் கிளம்பிப் போய் வேண்டுதலையை நிறைவேற்றிவிட்டு வரேன்.... என்னமோ விதண்டாவாதம் பண்ணினியே! இப்பப் பார்த்தியா? கடவுளை வேண்டிண்டால் நமக்கு அருள் செய்வான், வாழ வைப்பான்....''

லக்ஷ்மி எதுவும் சொல்லவில்லை. நளினியின் குரல் இன்னும் காதுகளில் ஒலித்துக் கொண்டிருந்தது: ''போன மாசம்னா சுரேஷ் ஜுரம் வந்து படுத்துண்டிருந்தான்! ரங்காச்சாரி மாமா இப்போன்னு தப்பர்த்தம் பண்ணிண்டுட்டார் போலிருக்கு. அது எப்பவோ சரியாயிடுத்தும்மா. ரொம்பக் கவலைப்படும்படியா ஏதுமில்லே. அதனால் தான் உங்களுக்கு எழுதலே...''

அதாவது, நேற்று வரதனின் வெள்ளிக்கண் வேண்டுதலையைப் புதுப்பித்துக்கொண்ட போது குழந்தைக்கு எவ்வித ஆபத்தும் இருக்கவில்லை. கடவுள் ஒரு நோயைக் காட்டி வரதனை மிரட்டியிருக்கவில்லை... ஆனால் விஷயம் தெரிந்தால் வரதன், அந்த நோயைப் பற்றி இப்போது தெரிய வந்ததே வேண்டுதலையை நினைவுறுத்த வந்த ஒரு தெய்வச் சூசகமென்று கருதலாம்... அவரவர்கள் நம்பிக்கை அவரவர்களுக்கு.

லக்ஷ்மி வாசலுக்கு வந்து நின்றாள். மாலை நேரம் வர்ண ஜாலமாய் வானத்தில் முகிழ்த்தது. வர்ணங்களுக்கு மேலே சிறு பனிக்கட்டி போல் பளீரென்று சுக்கிரன். அழகின் தரிசனத்தால் நெஞ்சில் பூத்த கனிப்பு தெய்வீகமாய்த் தோன்றியது. இவ்வுலகம் இறைவனின் சரீரம்தான்!

அடேடே! இன்றும் அந்தப் பார்வை இழந்த வாலிபனின் கையைப் பற்றி அச்சிறுமி பஸ் ஸ்டாண்டுக்கு நடத்தி வருகிறாளே! ஞாயிறுகளிலும் வரவேண்டியதான என்ன அலுவலோ அவனது? அவனுக்கு உதவும் அந்தக் குழந்தையின் முகத்தில்தான் எத்தனை அருள்!

'அப்பா, நான் கடவுளைப் பார்த்துண்டிருக்கேம்ப்பா!'

# குமரிப் பெண்ணே! குயிலாளே!

— விமலா ரமணி —



**10**

அக்கரையைப் பரிசல் அடைந்தபோது...' காசு கொடுப்பதற்காகத் தன் மடியில் இருந்த பொட்டலத்தை எடுத்தான் ஞானு. சில்லறையுடன் கொலுசும் சிரித்தது.

''அட....அன்னிக்கு வாங்கிட்டுப் போன கொலுஸு இல்லே இது? சுகன்யா அம்மாவுக்குத் தரல்லியா?'' — செல்லி கேட்டாள்.

அசுவாரசியமாக 'இல்லே' என்று தலையாட்டினான் ஞானு.

''ஏன் சின்ன ஐயா? கொலுஸு ரொம்ப அளகா இருக்கே?''

''சுகன்யாவுக்கு இது பிடிக்கலேயாம். அவ வேற கொலுஸு ஏற்கனவே வாங்கிட்டாளாம்!''

குரல் அடைக்கச் சொன்னான் ஞானு.

''அப்போ... இதை?''

செல்லி தயங்கித் தயங்கிக் கேட்டாள்.

''வாங்கிய இடத்திலேயே திருப்பித் தரப் போறேன்...''

செல்லி தயங்கித் தயங்கிக் கேட்டாள்.

''சின்ன ஐயாவுக்குக் கோபமில்லேயானா... இந்தக் கொலுஸை எனக்குத் தர்றீங்களா? நானும் இதே மாதிரி ஒரு கொலுஸு வாங்கணுமின்னு ரொம்ப நாளா நெனைச்சுட்டு இருந்தேன்.''

ஒரு நிமிடம் ஞானு யோசித்தான்.

''பணம் தந்துடறேன் சின்னய்யா''— செல்லி அவசரமாகச் சொன்னாள்.

''அதுக்கு யோசிக்கலே. இந்தக் கொலுஸு பயன்படாததுன்னு நினைச்சேன். இதுக்கும் ஒரு பயன் இருக்குன்னு இப்போப் புரியுது! இந்தா நீயே வெச்சுக்கோ.''

''காசு...''

''வேண்டாம். அது உனக்கு நான் கொடுத்ததா இருக்கட்டும். நான் வரேன்.செல்லி... நீ போகலாம்.''

''இல்லே சின்னய்யா நீங்க போயிட்டு வாங்க.. நான் காத்துட்டு இருக்கேன்.''

''வேண்டாம் செல்லி. வர நேரமாகும். சிலபேரைச் சந்திக்கணும்.''

''எத்தினி நேரமானாலும் காத்திட்டிருக்கேன். இந்தக் கொலுஸுக்குப் பயன் இருக்கிற மாதிரி என்னோட வாழ்க்கைக்கும் இப்படிக் காத்திருக்கிறதுலே ஒரு பயன் இருக்கு சின்னய்யா!''

செல்லி தைரியமாகப் பேசிவிட்டாள்.

ஞானு பிரமிப்புடன் அவளைப் பார்த்தான்.

கொலுஸைத் தன் கால்களில் பூட்டியபடி செல்லி பேசினாள்.

''சின்னய்யா..... இந்த சாதியைப்பத்தி என்ன நினைக்கிறீங்க?''

இதென்ன இடீர்க் கேள்வி! ஞானு யோசித்தான்.

''ஒண்ணுமில்லே சின்னய்யா... நாங்க சின்ன வலைக்காரங்க... என்னைப் பொண் கேட்டுப் பெரிய வலைக்காரங்க வராங்க... என்னோட அப்பன் தான் சாதி விட்டு சாதி என்னைக் கட்டிக் கொடுக்க மாட்டானாம்! எங்க சேரியிலே எனக்காகக்கத்தியும் கபடாவுமாக் காத்துக்கிட்டிருக்கிற ஒரு கூட்டமே பலியாகப் போகுது பாருங்களேன்... சாதியோட பேரைச் சொல்லி அவங்க அடிச்சுக் கட்டும்... அடிச்சுட்டு நல்லா சாவட்டும்... எங்க ஒரே மீனவச் சாதியிலே எத்தனை பிரிவு சின்னய்யா! நான் பெரியவன்னு இவன் சொல்றதும், தான்தான் பெரியவன்னு அவன் சொல்றதும்... இவங்க இப்படி அடிச்சுட்டே கிடந்தாங்கன்னா என்னோட ஆயுசு ஒரு வழியா முடிஞ்சு போயிடும்...''

கொலுஸைக் கால்களில் போட்டுக் கொண்ட செல்லி ''நல்லா இருக்கா சின்னய்யா?'' என்றாள்.



கரிய அந்தப் பாதங்களில் அழகாகப் பொருந்தியிருந்த அந்த வெள்ளிக் கொலுஸு பளபளத்தது.

சிவந்த இரு பாதங்கள்...

கொலுஸு அணிந்த இரு பாதங்கள்...

அத்துடன் இணைந்த மற்றும் இரு பாதங்கள்...

தனியாக நிற்கும் கரிய இரு பாதங்கள்...

மாறி மாறி ஞானுவின் மனக் கண்ணில் காட்சி மாற்றங்கள் உருவெளித் தோற்றங்களாய்த் தோன்றின.

''ஏன் செல்வி, நீ யாரையாவது நேசிக்கிறியா?''

செல்வியின் இதயம் படபடவென்று அடித்துக்கொண்டது.

அடிக்கடி நாயர் பாடுவாரே அந்த ரிதம் மனத்துள் குதூகலித்தது.

''தாதை தாதா தித்தை தை தை தை தக தை — தைத்தோம்''—

''மயிலானே.... குயிலானே''—

'சொல்லிடு செல்வி... உன் மனசைத் தொறந்து சொல்லிடு... சரியான சமயம் சொல்லிடு... இந்தச் சமயத்தை விட்டே. மறுபடியும் நேரம் கிடைக்காது. அடிக்கடி சின்ன ஐயா கதை சொல்லுவாங்களே... ஞாபகம் இருக்கா... ஒரு புத்த சன்னியாசி.. அவுரு பேரு குப்தர். இல்லே... இல்லே உபகுப்தர். அவர்ஒரு தேவதாசிக்கே மோக்ஷம் தந்தாராம்.... உடம்பாலே கெட்டுப்போன ஒரு வேசிக்கே பரலோக வாழ்வுகிடைச்சா மனசாலேயும் உடம்பாலேயும் கெட்டுப் போகாத உனக்கு இந்த உலக வாழ்வு கிடைக்காமலா போயிடும்? கேளு செல்வி... கேளு....'

மன ஆற்றில் மங்கல ஓடப் பாடல்கள் கேட்டன.

''ஆமா... சின்னய்யா நான் ஒத்தரை நேசிக்கிறேன்... மனசார நேசிக்கிறேன்:..''

''சொல்லிட வேண்டியதுதானே?''

''எப்படிச் சொல்றது? நான் வேற சாதி... அவுரு வேற சாதி சின்னய்யா.''

ஞானுவுக்குச் சிரிப்பு வந்தது. பவித்திரமான நடேச சாஸ்திரிகளின் ஜியேஷ்ட புத்ரி ஜாதகம் பார்த்துக் கொண்டு, நான் நட்சத்திரம் பார்த்துக் கொண்டு, சாதி மதம் பார்த்துக் கொண்டா காதலித்துக் குட்டிச் சுவராகிப் போனான்? அவளே அப்படி என்றால்... இவள் எம்மாத்திரம்?

''அன்புக்குச் சாதி கிடையாது செல்வி... நீ காலா காலத்திலே சொல்ல வேண்டியதைச் சொல்லிடணும்...இல்லேன்னா நிலைமை விபரீதமாயிடும்''

''விபரீதம்னா?''

''ஏதாவது தப்புத் தண்டா...?''

செல்வி இரைந்து சிரித்தாள்.

''தப்பா? இந்தச் செல்வியா? அப்படி எல்லாம் நடக்காது சின்னய்யா. இந்தச் செல்வியோட மனசுக்குள்ளே இருக்கிறதை

எல்லாம் பெரிய பள்ளம் தோண்டி அதுலே போட்டுப் புதைச்சு வெச்சிருக்கேன்.''

''நீ நேசிக்கிறது அந்த ஆளுக்குத் தெரியுமா?''

ஞானு கேட்டவுடன் செல்லி இரைந்து சிரிக்க ஆரம்பித்து விட்டாள்.

''ஏன் செல்லி இப்படிச் சிரிக்கிறே?''

''பின்னே என்ன சின்னய்யா? நானும் என் மனசைக் காட்ட என்னவெல்லாமோ பண்ணிப் பாக்கறேன். அந்த ஆளு புரிஞ்சுக்க மாட்டேன்னு கண்ணை மூடிக்கிட்டு இருக்காரே!''

''சன்னியாசியா?''

''இல்லே... ஆளு பாதிச் சாமியார் மாதிரி தான்... அவருக்காக நான் இக்கரைக்கும் அக்கரைக்குமாக எத்தினி வாட்டி பரிசல் ஓட்டிப் போயிருக்கேன் தெரியுமா? அட.... அவரை முத முதல்லே இந்தக் கிராமத்துக்குக் கூட்டிக்கிட்டு வந்ததே நான்தான்! பொளுது சாஞ்சப்புறம்கூட எத்தினி நேரம் காத்திருந்து கிராமத்துக்குக் கூட்டிப் போயிருக்கேன் தெரியுமா? ஒரு வாட்டி உடம்பு சுகமில்லாம இருந்து கூட நான் அவுருக்காகவே விரைக்கிற குளிரிலேயும், ஊதக் காத்துலேயும் காத்திருந்து கூட்டி வந்திருக்கேன் தெரியுமா?''

ஞானு கபடமின்றிச் சிரித்தான்.

## கவி பாரதியாரைப்பற்றி ஸ்ரீ காஞ்சி ஆசார்யாள்!

எட்டயபுரம் மகாகவி பாரதியார் பிறந்த இல்லத்துக்கும் பாரதி மணிமண்டபத்துக்கும் விஜயம் செய்த ஜயேந்திர சுவாமிகள் அருளுரை: ''நீங்கள் எனக்குக் கொடுத்த வரவேற்பைக் கண்டு பெரும் மகிழ்ச்சி அடைகிறேன். இந்தப் பரந்த தேசத்தில், தேசியத்தையும், தெய்வீகத்தையும் ஐக்கியப் படுத்தி மக்களுக்கு எடுத்துக் கூறிய ஒரே கவிஞன் மகாகவி பாரதிதான்! அவன் நடத்திய தேசியப் போராட்டம் சாமான்யமானதல்ல! தேசமெங்கும் சிந்தனை சக்திகளைத் தூண்டிவிட்டு, உள்ளங்களை அறிவொளியாக்கப் பெரும் போராட்டத்தை நடத்தினார். அவரது தேச பக்தி மிகுந்த வீரவாசகம் நம்மையெல்லாம் தட்டி எழுப்பியது. நமது பண்பாடுகளையும், கலாச்சாரத்தையும் வரையறுத்துக் கோடிட்டுக் காட்டியவர் பாரதி. ஆகவே இந்த மண்ணில் பிறந்த குழந்தைகள் எல்லோரும் பாரதி பாடல்களைக் கண்டிப்பாக மனப்பாடம் செய்துகொள்ள வேண்டும்.''

ஆதாரம்: தினமணி

தகவல்: ரகமி





''சரியான பைத்தியமா இருப்பான் போலிருக்கே அந்த ஆள்? நீ இத்தனை பண்ணியும் அவனுக்குப் புரியலேன்னு அவன் ஒரு ஜடம்... சரி நேரமாயிடுத்து... நீ போ... நான் வரேன்....''

''உங்களுக்காக... நான் காத்திருந்து கூட்டிட்டுப் போறேன் சின்னையா.. நீங்க மொள்ள வாங்க. நான் காத்திருக்கேன்....''

செல்லி நிறுத்தி நிதானமாகச் சொன்ன போது...?

நாலு எட்டு நடந்த ஞானு திடீரென்று ஒன்றைப் புரிந்து கொண்ட பாவனையில் திரும்பிப் பார்த்தான்.

கிராமத்தில் முதன் முதலாக அவனைக் கூட்டிவந்த செல்லி! பரிசல் ஓட்டி வந்த செல்லி!

''செல்லி... நீ.... நீ... சொல்றது...?''

செல்லி சிரித்தாள்.

''என்னோட வாழ்க்கைக்கும் இப்படிக் காத்திருக்கிறதால பயனிருக்கு சின்னய்யா!''

செல்லி... செல்லியா இப்படிப் பேசினாள்?

''அட இப்பத்தான் புரியுதா? அன்புக்குச் சாதி கிடையாதாமே சின்னய்யா? அப்படியா? நீங்க சொன்னதுதான் சின்னய்யா!''

ஞானு திகைத்துப் போய் நின்றான்.

''நீ என்ன சொல்றே?''

''உண்மைதான் சின்னய்யா... ஊருக்கு உபதேசம் பண்றது சுலபம். நாம செஞ்சு காட்டும்போதுதான் சிரமம் தெரியும்... அன்னிக்கு என்னைத் தொட்டு எழுப்பினீங்க. ஐயாவா தொட்டது?-ன்னு நான் பதறினப்போ 'அதனால என்ன' அப்படீன்னீங்க.. இன்னிக்கு நான் தொட்டேன். இப்போ நீங்க பதறுறீங்க...''

'செல்லி நீ தொட்டது என் மனம்! என் மனம்... ஏற்கனவே உடைந்து ஓடாகிக் கிடக்கும் என் மனம். யாரிடமாவது சொல்லி அழமாட்டோமா என்று காத்திருந்த நேரத்திலே எனக்குக் கிடைத்திருக்கிற ஆஸ்ரயம் நீ! நிழல் நீ! ஆனால்....?'

''என்ன சின்னய்யா யோசிக்கிறீங்க? கையைத் தாழ்த்திக் கீழேயே நின்னுட்டு இருந்த என்னை மேலே வான்னு கை கொடுத்துக் கூப்பிட்டீங்க.... இன்னிக்கு நீங்களே கீழ இறங்கினா எப்படி சின்னய்யா? இதை எல்லாம் நான் சொல்லியே இருக்க மாட்டேன். ஆனா...ஆனா... அந்தச் சுகன்யாப் பொண்ணைப் பத்தி நாயர் பேசினதைக் கேட்டப்போ... வேண்டாம் சின்னய்யா... என்னோட வாயாலே நான் சொல்ல விரும்பல்லே.. ஒரு பொண்.. அவ மேல் சாதியா இருந்தாலும் கீழ் சாதியா இருந்தாலும் தப்புப் பண்ணினா தப்பு, தப்புத்தான். எங்க சாதியானா தலையைச் சீவிடுவாங்க.. சில சாதியிலே மூடி மறைப்பாங்க... சிலதுலே பஞ்சாயத்துக் கூட்டுவாங்க... அதெல்லாம் ஏன்? சந்தனு மகாராஜாவே ஒரு கீழ் ஜாதிப் பொண்ணைக் கட்டிக்கலையா? மறந்து போயிட்டீங்களா சின்னய்யா? இக்கரைக்கும் அக்கரைக்கும் நீங்க போறப்ப எல்லாம் எனக்கு ஒவ்வொரு கதையாச் சொல்லிட்டே இருப்பீங்களே... இப்போ நான் சொல்றேன்... நான் பேசினது தப்பா? தப்புன்னா என்னை மன்னிச்சிடுங்க சின்னய்யா... நீங்க இல்லாம... என்னால...

# பிலிப்ஸ்

ரூ. 1,690 *

## இப்போது பிலிப்ஸ் வழங்குது ஒருங்கிணைந்த சர்க்யூட்!
## அது அளவில் சிறிது, ஆற்றலில் பெரிது; அதிக தெளிவான ஒலி.

பிலிப்ஸ், எலக்ட்ரானிக் உலகில் வழங்கிடும் புதிய விந்தை: ஒருங்கிணைந்த சர்க்யூட்— மிகத் தெள்ளத் தெளிவான ஒலி வழங்குது—மொத்தத்தில் நம்பகமானது பல்லாண்டுகளுக்கு.

அத்துடன், புதிய பிலிப்ஸ் பவர்-காம்பாக்ட், விரிவான ஃப்ரீக்வன்சி ரேஞ்ச். எனவே, ஒலிப்பதிவை மீண்டும் அப்படியே கேட்கலாம்—அதன் வாட்டேஜ் வரிசையில்.

**சிறப்பம்சங்கள்:**

- விரிவான ஒலி முழக்கத்திற்கான 18 வாட்டுக்கள்
- 2 மைக்ரோ குருவ் ஸ்டைலி.
- டேப் ரிக்கார்டர்/ரேடியோவிற்கு தனித்தனியே ஆம்ப்ளிஃபையரை இயக்க முடியும்.
- ரிக்கார்டு முடிந்ததும் தானே நிறுத்திக் கொள்ளும் அமைப்பு.

**உங்கள் பிலிப்ஸ் டீலரிடம் இலவச செயல்முறை விளக்கம் பெறலாம்.**

OBM-6745 TM

* எக்சைஸ் தீர்வை உட்பட அதிகபட்ச சில்லறை விலை. மாநில விற்பனைவரி மற்றும் இதர உள்ளூர் வரிகள் தனி

# புதிய பிலிப்ஸ் பவர் – காம்பாக்ட் ஸ்டீரியோ சிஸ்டம் ஏ எ:ப் 582




பைகோ லெக்ட்ரானிக்ஸ் அண்ட் லெக்ட்ரிகல்ஸ் லி.

# சிற்பக்கலைநயம்வாய்ந்த சோமநாத்பூர் கோயில், கர்நாடகா

அக்காலத்து கலைத்திறனை இக் கோயிலின் கற்கள் பேசுகின்றன. பூ வேலைப்பாடு களும், வடிவமைப்புகளும், அதிநுட்பமான கட்டிடக்கலை வல்லமையும் கலைஞர்களின் கலை ஆர்வத்தின் பிரதி பலிப்பாகத் திகழ்கின்றன.

இவ்வாருகத்தான் காலங்-காலமாக கல்லிலே கலை வண்ணம் கண்டு வழிவழி மரபை உலகறியச் செய்துள்ளனர்.

பழங்கால மரபுகளை மனதில் கொண்டு தாவண்கெரே காட்டன் மில்லில் புராண அழகை பிரதிபலிக்கும்படி யான் துணி வகைகளைத் தயாரித்தளிக்கிறோம். நுட்பமான நெசவு, கலைஞர் களின் கைவண்ணம்—எண்ணிலடங்காத துணி வகைகள், ஒவ்வொருவரும் பாராட்டும் வண்ணம்.

சிறந்த துணிமணிகளை உயர்ந்த மரபாகக் கருதுவது

## தாவண்கெரே

தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லி., ஹனுமந்தப்பா கட்டிடம் சித்ரதுர்கா ரோடு, தாவண்கெரே-577 002.
ஷோரூம்:
காவேரி பவன், பெங்களூர் 560 009.
தாஜிபன்பேட், ஹூப்ளி 580 020.
சித்ரதுர்கா ரோடு, தாவண்கெரே 577 002.



கேசவா கோயில்,
சோமநாத்பூர்,
மைசூர், கர்நாடகா,
ஹோய்சாலா
காலத்தியது.
கி.பி. பன்னிரண்டாம்
நூற்றாண்டு

TAIDCMICI TAM

என்னால....'' — அவன் காலடியில் விழுந்தாள் அவள் விம்மினாள்.

ஞானு கீழே கிடக்கும் செல்வியைப் பார்த்தான்.

தீர்க்கமாகப் பார்த்தான்.

காலில் கொலுஸு பளபளத்தது.

இதோ... இதுதான் அவன் தேடிய துணை.

இதுதான் அவன் நாடிய நிழல்.

இங்குதான் அவன் இளைப்பாற வேண்டும்.

செல்வியின் தாழ்வு மனப்பான்மையைப் போக்குவதற்காக அவன் அவ்வப்போது சொன்ன கதைகள், காட்டிய பரிவுகள் எல்லாம் இன்று இவனின் உயர்வு மனப்பான்மைக்கு ஒரு சவால் விட்டன!

''ஜாதிகள் இல்லையடி பாப்பா!'' — பாடினது பாரதியா?

நந்தனுக்கு மோக்ஷம் தந்தது தில்லை.

ஆதிசங்கரருக்கு ஞானம்கொடுத்தது காசி.

ஞானுவுக்கு அறிவு தந்தது இந்தச் செல்வியா?

ஒரு பெண் திருமணத்துக்குப் பிறகு தன் கணவனைச் சார்ந்து நிற்கிறாள்.

பிராமண மதப்படி கோத்திரம் மாறுகிறாள். இவளை மணந்து இவளை என் கோத்திரமாக மாற்றிக் காட்டுவேன்.

சுகன்யா பிரும்ம குலத்தில் பிறந்தும் சாதி மாறிவிட்டாள்.

குலம் மாறிவிட்டாள்.

நான் உண்மையான அந்தணன் என்பது நிஜமானால் இவள் பிறப்பை உயர்த்திக் காட்ட வேண்டும்.

நானும் உயர்ந்து நிற்பேன். இந்தக் கிராமம் என்னை வெறுக்கலாம். என்னை ஒதுக்கலாம். ஆனால் சமூகத்தில் நான் வாழ்ந்து காட்டுவேன். முடிந்தால் மந்திரங்களில் வாழ்வேன். இல்லை என்றால் என் கடமைகளில் வாழ்ந்து காட்டுவேன்.

கடமைகளைச் செய்கிறவனை கீதை பாராட்டுகிறது.

இந்த ஓடக்காரப் பெண்ணை ஒரு நொடியில் ஒதுக்கிவிடலாம். அது ஒன்றும் பெரிய காரியமில்லை. ஆனால் இவள் எனக்காக இந்தப் பரிசல் ஓட்டும் தொழிலையே ஒரு தவம்போல், யாகம்போல், யக்ஞம்போல் நடத்தி இருக்கிறாள்.

யாகத்துக்கு ஆஹுதி தரவேண்டாமா?

என்னுடைய வயிற்றுப் பிழைப்பு இந்த யாகத்தில் பலியாகட்டும்.

இந்தப் பிழைப்புப் போனால் நான் சாதாரண மனிதனாக வாழமுடியும்.

படித்த சாஸ்திரங்களும் கற்ற வேதங்களும் வீணாகிப்போகும்.

ஆனால்...?

ஒரு ஓடக்காரப் பெண்ணின் உயிர் காப்பாற்றப்படும்.

ஓர் உயிரைக் காப்பாற்றுவதுதான் உத்தமம்.

இதைக்கூட நான் செய்யவில்லை என்றால் நான் ஒரு அதமன்! பிராமணன் உத்தமன். அவன் அதமனாகக் கூடாது.

அன்று சுகன்யா அழுதபடி வந்து என்ன சொன்னாள்?

''இந்த அக்கிரமத்துக்கு எங்கே போய் நீதி கேட்பேன்?''





இதே மாதிரி நிலையில்தானே மனத்துள் கேள்வி கேட்டபடி செல்வி அலைந்துகொண்டிருக்கிறாள்?

தெரிந்தோ தெரியாமலோ அவள் மனத்தில் ஏற்பட்ட சலனத்துக்கு நான்தானே பொறுப்பு!

சுகன்யா கண்ணீருடன் நிற்பது போல் இவளும் கண்ணீருடன் அலைய வேண்டுமா? மொத்தக் கண்ணீரையும் இந்த ஞானுவே வடிக்கட்டும். அதுதான் சரி...

அதுதான் எனக்குச் சரியான தண்டனை!

ஞானு முடிவு செய்தான்.

அவன் முன் எத்தனை எத்தனையோ தடவை எத்தனை எத்தனையோ கரங்கள் நீண்டிருக்கின்றன.

அத்தனை பேருக்கும் பிரசாதம் வழங்கியிருக்கிறான் ஞானு.

விபூதி, குங்குமம், சர்க்கரைப் பொங்கல்.

அவன் முன் நீண்ட எந்தக் கரத்தையும் அவன் காலியாக ஏமாற்றியதில்லை.

இப்போதும் அவன் முன் ஒரு கரம் தாழ்ந்து நிற்கிறது.

யாசிக்கிறது. அன்புப் பிச்சை கேட்கிறது.

இந்தக் கரத்தை ஞானு ஒதுக்கப் போகிறானா அல்லது....?

ஒன்றாக இணைக்கப் போகிறானா?

ஒரு நிமிடம் கண்களை மூடித் தியானித்தான் ஞானு.

'சதி சுகன்யா' கைகளில் குச்சியுடன் அவன் கண்களைக் குருடாக்கக் காத்திருந்தாள்.

ஒரு மீனவப் பெண் சந்தனு ராஜனுக்காகத் தவம் இருந்தாள்.

தவங்கள் பலிக்கட்டும்.

தன் காலடியில் நத்தை மாதிரி சுருண்டு கிடந்த செல்வியை, குனிந்து தன் இரு கைகளில் உயரத் தூக்கினான் ஞானு.

கொலுஸு சப்தித்தது. (தொடரும்)

# 107 ஸ்பெஷல் டிடர்ஜெண்ட் பார்

## அதிவெண்மையாக்கும் விசேஷ குணம் கொண்டது.




அதிவெண்மை படைக்கும் விசேஷ சக்தி கொண்டது. 107 ஸ்பெஷல் டிடர்ஜெண்ட் பார் மட்டுமே துணிகளின் கூடுதலான வெண்மைக்கு சிறந்தது. இதன் பொங்கும் நுரைவளம் அழுக்கை அகற்றி வெண்மையை பளிச்சிடச் செய்கிறது.

இது மிகவும் சிக்கனமானதும்கூட.

தயாரிப்பாளர்கள் :-

அல்ட்ராமரைன் அண்ட் பிக்மன்ட்ஸ் லிட்.
ராணிப்பேட்டை 632 403 தமிழ்நாடு

Sista's-UPL-30A-81-TAM

# கண்ணன் காத்திருக்கின்றான்!



## மகாகவி பாரதியார்

நேர மிருந்ததின்னும் நித்திரையின்றி — உங்கள்
நினைப்புத் தெரியவில்லை, கூத்தடிக்கிறீர்!
சோர னுறங்கிவிழு நள்ளிரவிலே — என்ன
துவி படுக்குதடி இவ்விடத்திலே.
ஊரை யெழுப்பிவிட நிச்சயங் கொண்டீர் — அன்னை
ஒருத்தி யுண்டென்பதையு மறந்து விட்டீர்.
சார மிருந்ததென்று வார்த்தை சொல்கிறீர் — மிகச்
சலிப்புத் தருகுதடி சகிப் பெண்களே!

எத்தனை பொய்களோ, என்ன கதைகள்
என்னை யுறக்கமின்றி இன்னல் செய்கிறீர்;
சித்த மிடுங்குழல்கள் வீணைகளெல்லாம்
தாளங்க ளோடு கட்டி மூடிவைத்தங்கே,
மெத்த வெளிச்சமின்றி யொற்றை விளக்கை
மேற்குச் சுவரருகில் வைத்ததன் பின்னர்,
நித்திரை கொள்ள எனைத் தனியில் விட்டே
நீங்களெல்லோருமுங்கள் வீடுசெல்லுவீர்.

(பாங்கியர் போனபின்பு தனியிருந்து சொல்லுதல்)

கண்க ளுறங்கவொரு காரணமுண்டோ?
கண்ணனை இன்றிரவு காண்பதன் முன்னே?
பெண்க ளெல்லோருமவர் வீடுசென்றிட்டார்
பிரிய மிகுந்த கண்ணன் காத்திருக்கின்றான்.
வெண்கல வணிகரின் வீதிமுனையில்
வெளிப்புறத்திலெனைக் காணடியென்றான்
கண்க ளுறங்கலெனுங் காரிய முண்டோ,
கண்ணனைக் கையிரண்டுங் கட்டலின்றியே?

மேலட்டை - வண்ணச் சித்திரம்: மணியம் செல்வன்

# சினிமாவில் பாரதி



**எஸ். வி. சுப்பையா (கப்பலோட்டிய தமிழன்) பற்றி சிவாஜி கணேசன்:**

சொல்லில் மிடுக்கு; பார்வையில் கூர்மை—

இந்த இரண்டையும்தான் பாரதியாக நடிக்கும்போது முக்கிய அம்சங்களாகக் கருதிச் செயல்பட்டார் நண்பர் சுப்பையா. நாங்கள் இருவரும் சேர்ந்திருக்கும் காட்சிகள் வரும்போதெல்லாம் அவர் பாரதியாகவே மாறிவிட்டதுபோல் எனக்குத் தோன்றும். அப்படியே அவரும் என்னைப் பற்றி எண்ணினார்.

உயர்ந்த மனிதர்களாக வேடம் தாங்கி நடிக்கும்போது அவர்களுக்கு உள்ள பெருமையைக் காத்துத் தர வேண்டும் என்ற பய பக்தியுடன் நடிக்கிறோம். அது நம்மையுமே உயர்த்தி விடுகிறது! மேன்மேலும் புகழ் சேர்த்து வேறு பல வெற்றிகளுக்கு அடிகோலுகிறது!

**சிவாஜி கணேசன் (கை கொடுத்த தெய்வம்):**

"சிந்து நதியின் மிசை நிலவினிலே
சேர நன்னாட்டிளம் பெண்களுடனே...."

—பாரதி திர்க்கதரிசி என்பதற்கு "பாரத தேசம்" என்று தலைப்புக் கொடுத்து அவர் எழுதிய பாடலே விட வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

இன்று நாட்டில் இருக்கும் பல பிரச்னைகளுக்குத் தீர்வு காண தேசிய ஒருமைப்பாடல்லவா தேவைப்படுகிறது. இந்தப் பாடலே அந்த அடிப்படையில் உதித்த ஒன்றுதானே?

அந்த மகா கவியின் வேடத்தில் அவர் பாடுவதுபோலவே நடிக்கப் போகிறோம் என்றால் எனக்கு எத்தகைய மெய்சிலிர்ப்பு ஏற்பட்டிருக்கும்!

ரசிகர்களால் உணர முடியாததா அது?



**விஜயகாந்த் (சாதிக்கு ஒரு நீதி):**



...ணேசன் 'இரு கோடுகள்



பொருந்துவேனு?' என்ற சந்தேகம் என்னுள் எழுந்தது.

''தமிழ் வளர்த்த மதுரையில் பிறந்தவன் நீ. இப்படிப் பயப்படலாமா? மேலும் உன் தோற்றம் அவர் வேடம் ஏற்கப் பொருத்தமாய்த்தான் இருக்கிறது'' என்று இயக்குனர் சங்கர் என்னைத் தேற்றினர்.

எனக்குத் தைரியம் பிறக்க மேலும் இரு காரணங்கள்: (1) பாரதி நூற்றுண்டு நெருங்குகையில் பாரதி வேடம் ஏற்று நடிக்கப் போகிறோம் என்ற பெருமை (2) மூன்று ஆண்டுகளாக மதுரையில் உள்ள ஒரு பாரதியார் சங்கத்தின் வருடாந்தர விழாவில் கலந்துகொண்டு வருகிறேன். ''இனியும் நீங்கள் தான் வரவேண்டும். ஷூட்டிங் அது இது என்று சாக்குப் போக்குச் சொல்லக் கூடாது'' என்று அவர்கள் அன்புக் கட்டளை இட்டதை ஏற்றுக் கொண்டுமிருக்கிறேன். சங்கத்தின் சார்பில் வழங்க ஒரு 'ரோலிங் ஷீல்டும்' அளித்திருக்கிறேன்.

இருக்குமா?'' — சந்தேகத்துடன் கேட்கிறேன்.

''ரொம்ப கரெக்டா இருக்கும். நீதான் போடப் போறே'' என்கிறார் பாலு (பாலசந்தர்)

நானும் பாரதி வேடமணிந்து வந்து நிற்கிறேன்.

பாலசந்தர்: முதல் ஷாட்டில் நீ சிலை மாதிரி நிற்கிறே.

நான்: பாரதிக்கு சிலைன்னு அவருக்கே கோபம் வரும். 'சிலை செய்யும் கல்லிலே நாலு வீடுகளுக்கு அம்மி குழவியாவது செய்து தந்தால் உபயோகமாக இருக்கும்' என்பாரு! நம்ம சிலையைத் திறந்து வைச்சது யாருன்னு பார்க்கச் சிலையான பாரதி குனிவாரு; கவிழ்வாரு!

இப்படி நான் சொன்னதும் எல்லோரும் சிரித்தோம். மூட் வந்து விட்டது. சிரித்தபடியே நடித்தேன்.

பாப்பா பாட்டுப் பாடிய பாரதி நான்தானே — நான்
பாடிய பாட்டைக் கேட்க மீண்டும் வந்தேனே!

என்ற பாடலைப் படமாக்கினேம்!



**கமல், இயக்குனர் கே. பாலசந்தர் சொன்னது :**

''பாரதி நூற்றுண்டில் பலர் பாரதி வாழ்க்கையைத் திரைப்படமாக்க முன்வந்திருக்கிறார்கள். நானும் அறிவித்திருக்கிறேன். கமல் என் படத்தில் தோன்றுவார் என்றும் கூறியிருக்கிறேன்.

''ஆனல் நான் அவசரப்படப் போவதில்லை. பாரதி நூற்றுண்டுக்குப் பிறகும் பாரதியைத் தமிழர் மறக்கப்போவதில்லை; நானும் மறக்க மாட்டேன். எனவே நிதானமாகவே செயல்படப் போகிறேன். நிறையத் தகவல்கள் சேகரிக்கிறேன், சிந்திக்கிறேன், மனத் திரையில் சித்திரங்களைத் தீட்டி வருகிறேன்.''

இப்படிக் கூறும் பாலசந்தர் கமலஹாசனுக்குத் தம் மனத் திரையில் தான் பாரதி வேடம் போட்டுப் பார்த்திருக்கிறார், இன்றுவரை. ஆனல் நேயர்கள் ஆசையைப் பூர்த்தி செய்ய இங்கு ஓவியர் கல்பனு கமலுக்குப் பாரதி வேடம் அணிவித்திருக்கிறார்!

தொகுப்பு: சலன்



# கற்பு நிலையென்று சொல்ல வந்தார்...

அனுராதா ரமணன்

**பெண்கள் விடுதலைக்கும்மி**

கற்பு நிலையென்று சொல்ல வந்தார் இரு
கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்
வற்புறுத்திப் பெண்ணைக் கட்டிக்கொடுக்கும்
வழக்கத்தைத் தள்ளி மிதித்திடுவோம்

- பாரதியார்

திரும்பத் திரும்பப் பாடிப் பார்க்கிறாள் ஜானகி. முதல் வரியை ஒழுங்காகப் பாடினால், அடுத்த வரி பிசிறடிக்கிறது.

நாற்பது வயசுக்கு மேல் இவளுக்குச் சங்கீதம் வரப்போவதில்லை. இருந்தாலும் மாதர் சங்க அங்கத்தினர் இவளைச் சும்மா இருக்க விடவில்லை. பாரதி தினத்துக்கு, குழந்தைகளின் நடன நிகழ்ச்சி. அதற்கான கும்மிப் பாட்டை ஜானகியுடன் சேர்ந்து இன்னும் நாலு பெண்கள் கோரஸாகப் பாட வேண்டும். ஒவ்வொருவரும் மற்ற மூவரை நம்பி, பாட்டின் வரிகளைப் பொட்டை நெட்டுரு அடிக்க....

இந்தப் பாட்டை ஒழுங்காய்ப் பாட வேண்டும் என்கிற அக்கறையை விடவும் — 'மேடையில் எந்த நிறப் பட்டுப் புடவையைக் கட்டிக் கொண்டு நின்றால் எடுப்பாக இருக்கும்' என்பதைப் பற்றிய கவலைதான் அதிகம்.

''கற்பு நிலையென்று சொல்லவந் தாரிரு
கட்சிக்குமஃது பொதுவில் வைப்போம்...''

குரல் ஒத்துழைக்காமல் ராகத்தில் ஏற்ற இறக்கமின்றித் திவச மந்திரம் போல ஒரே மாதிரிப் போனாலும், பாட்டின் வரிகள் மனசுக்குள் ஆழமாய்... மிக ஆழமாய்...

'ஆமா... மேடையில பாடி முழங்கிட்டாப்பல ஆச்சா... பாடப் போற நாலு பேர்ல — எவ புருஷன் ஒழுங்கு... இதையெல்லாம் வெளில சொல்லிக்க முடியுமா... உள்ளே இருக்கிற ஊழல்களை மூடி மறைக்கப் பணம், பதவி, பட்டுப் புடவை. காமினியாவது 'என் ஹஸ்பெண்டை நான் தனியா விட முடியாது'ன்னு அப்பட்டமா ஒத்துக்கறா. சங்கரி, புருஷனோட இந்த வீக்னஸையே பெருமையா வெளில சொல்லிக்க ஆரம்பிச்சுட்டா. 'என் புருஷன், நெற்றிக்கண் ரஜினிகாந்த் டைப்'னு....

வேற வழி... வீட்டுக்காரரைத் திருத்த முடியாட்டா அந்த மனுஷனோட பலவீனத்தையே பெருமையா தம்பட்டம் அடிச்சுக்க வேண்டியதுதான்.

ஜானகியின் நெஞ்சுக்குள் அவளது கணவர் மூர்த்தி அந்தக் காலத்தில் ஆடிய ஆட்டபாட்டங்களெல்லாம் திரைப்படமாய்விரிய...

கொஞ்சமா நஞ்சமா... எத்தனையைப் பொறுத்துக் கொண்டு போயிருக்கிறாள் ஜானகி...

இப்பொழுது மூர்த்தி அடங்கிவிட்டார். பிள்ளை பிரபு கிளம்பியிருக்கிறான். இந்த விஷயத்தில் அப்பாவே தேவலை என்பது போல லஜ்ஜை கெட்டுப் போய்...

அவனது மாடி அறையில் சிநேகிதர்களின் பேச்சும், பெண்களைப் பற்றிய அவர்களின் ரசக் குறைவான விமரிசனங்களும் ஜானகியின் காதில் விழாமலில்லை.

தோளுக்கு மேல் வளர்ந்த பிள்ளையிடம் இது பற்றி நேருக்கு நேர் பேச அருவெறுத்து எத்தனையோ முறை கணவனிடம் புலம்பி இருக்கிறாள் ஜானகி.

''இதப் பாருங்க... வேலைக்காரி அம்மிணிக்கு உடம்பு சரியில்லேன்னு அவ தன் பொண்ணை வேலைக்கு அனுப்பி யிருக்கா. பாவம், அதும் தலையெழுத்து இருபது வயசுக்குள்ள வாழாவெட்டியா பொறந்த வீட்டுக்கு வந்து இருக்க வேண்டிய நிலைமை. ஏதோ அம்மாவுக்கு ஒத்தாசையா இருக்குமேன்னு அவ வர்றா.. இவன் என்னடான்னா அவ பெருக்க வர்றப்போ, நாலு தடிப் பசங்களை வெச்சுக்கிட்டு என்னமோ அசிங்கமா கமெண்ட் அடிக்கிறான். நாக்கைப் பிடுங்கிக்கலாம் போல இருக்கு...''

''சரிதாண்டி உன் பிள்ளை இங்கிலீஷ்லே தானே கமெண்ட் அடிச்சிருப்பான். அவளுக்கு ஒண்ணும் புரியாது போ. இதுக்கு என்னத்துக்கு ஆர்ப்பாட்டம் பண்றே...''

மூர்த்தியின் சாவகாசமான பதில் அவளுக்கு எரிச்சலை உண்டு பண்ணும்.

''எப்பவும் அவனுக்கே பரிஞ்சுக்கிட்டு வாங்க. இப்பத்தான் பி.ஏ. முதல் வருஷத்துல காலடி வச்சிருக்கான். அவன் முன்னாடி வர, எனக்கே உடம்பு கூசிப் போகுதுங்க... ச்சே, அவன் பேசற பேச்சை நீங்க கேக்கணும்... என்னமோ அம்மாவுக்கு இதெல்லாம் புரியாதுன்னு நினைச்சுக்கிட்டிருக்கான்... இல்லே, இவ எதையும் கண்டுக்க மாட்டாங்கற அலட்சியமான்னு தெரியணும்....''

''வயசுடி.... வயசு... அந்த வயசுல நான் எப்படி இருந்தேன்... இதையெல்லாம் பெரிசு பண்ணக் கூடாது. டேக் இட் ஈஸி...''

அவர் அப்படிச் சொல்லி விட்டாலும் ஜானகியால் இதை சகஜமாக எடுத்துக் கொள்ள முடியவில்லையே... வீட்டில் மனசில் இத்தனை வேதனையை வைத்துக்கொண்டு என்ன பாட்டு வேண்டிக் கிடக்கிறது...

இப்படி ஒதுங்கவும் முடியாது. எல்லா ஊழல்களையும் பெரிய பட்டுப் போர்வையால் மூடிக்கொண்டு கிளப் என்றும் சமூக சேவை என்றும் அல்லாடுவதே இந்தப் பெரிய

மனிதர்களின் வீட்டுப் பெண்களுக்கு வழக்கமாய்ப் போயிற்றே....

உதட்டுக்குள் பாட்டை முனகியபடி காப்பியைக் கலந்து எடுத்துக் கொண்டு பிரபுவின் அறைப் பக்கம் போனவள்—

அந்தக் காட்சியைக் கண்டு விதிர் விதிர்த்துப் போய்விட்டாள்.

''டேய் பிரபு!''

தாயின் அலறலைக் கேட்டு, துள்ளிக் கொண்டு திரும்பியவனின், சேர்த்தணைத்த கைகளிலே இது நேரம் வரையில் சிறைப்பட்டிருந்த அவள் – வள்ளி – துடைப்பத்தை விட்டெறிந்துவிட்டுத்தேகமெல்லாம்பரபரக்க ஜானகியிடம் ஓடிவர....

''அம்மா....''

மேற்கொண்டு பேச முடியாமல், கருத்த கன்னங்களில் மாலை மாலையாய் உருண்டோடிய கண்ணீர்....

அவமானத்தில் குன்றிப் போய்விட்டாள் ஜானகி. இத்தனைக்கும் காரண கர்த்தாவான பிரபு, எதுவுமே நடக்காத மாதிரி தலையைச் சிலுப்பிக் கொண்டு வாசல் பக்கம் விரைகிறான்.

''எங்க அம்மாவுக்குத் தெரிஞ்சா... கொன்னுடுங்க...ஏற்கனவே புருஷனை விட்டுட்டு வந்திட்டேன்னு திட்டிக்கிட்டு இருக்கு''

வள்ளியின் மேனி, மழையில் நனைந்த சிட்டுக் குருவி போலப் படபடக்க....

''அழாதே... என் பிள்ளைக்குப் பதிலா நான் உன் கிட்ட மன்னிப்புக் கேட்டுக்கறேன். தாயே...அழாதே... இவன் அப்பா வரட்டும் இவனுக்குச் சரியான பாடம் புகட்டறேன்.''

எண்ணெய் வழியும் முகமும் வறண்ட கூந்தலும், தேகத்தில் கவுச்ச நாற்றமும் நிரந்தரமாய்த் தங்கிப் போன வள்ளியை அணைத்து ஆறுதல் சொல்ல வேண்டிய நிலை ஜானகிக்கு. அந்தச் சிறு பெண்ணின் கைகளைப் பிடித்துக் கொண்டு கண்ணீர் மல்கக் கெஞ்ச வேண்டிய நிலைமை.

''ஐயா வரட்டும்....இவனைக் கட்டிவச்சுத் தோலை உரிக்கறேன்.''

ஆனால் -- மூர்த்தி வந்த பிறகோ... எல்லாமே தலைகீழாக மாறிவிட்டதே...



மனைவி சொன்னதை மௌனமாய்க் கேட்டவர், முதலில் கார் டிரைவரை அனுப்பி வள்ளியையும், அம்மிணியையும் வரவழைத்தார்.

''இதப் பாரு கிழவி... நீ இந்த வீட்டுல எத்தனை வருஷமா வேலை செய்யறே?''

''ஏழெட்டு வருஷமாங்க.''

''உனக்கு நம்ம பிரபுவைச் சின்னப் பிள்ளையிலேருந்து தெரியுமில்லையா?''

''தெரியுமுங்க....''

''இத்தனை வருஷத்துல அவன் தப்பு தண்டாவா யார் கிட்டயாவது நடந்துக் கிட்டிருக்கானு... இன்னிக்கு என்ன செஞ்சான்னு உன் பொண்ணையே கேளு...''

அம்மிணி ஒன்றும் புரியாமல் மகளையே பார்க்கிறாள். கருங்கிய உதடுகள் மிக மெல்லியதாய்த் துடிக்கிறது.



**பாடல்கள் வழி நடத்துகின்றன!**

நான் நாற்பது ஆண்டுகள் ராஜாஜியின் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் பணியாற்றி 1970ல் ஓய்வு பெற்றவன்.

என் 69வது வயது வரை என் வாழ்க்கையில் அதிர்ச்சி ஏதும் அனுபவிக்கவில்லை இறைவன் கருணையால். 1977ல் வாழ்க்கையில் மிக நல்ல முறையில் முன்னேறி வந்து கொண்டிருந்த என் தலைமகன் திடீரென்று மாரடைப்பால் தன 34வது வயதில் காலமானான். இவன் 1942ல் காந்தி ஆசிரமத்தில் பிறந்தவன். இவன் மனைவியும் மூன்றாண்டுகள் கழித்து ஆறு, நான்கு, இரண்டு வயது கொண்ட மூன்று குழந்தைகளை எங்கள் பொறுப்பில் விட்டுக் காலமாகி விட்டாள். அழுதேன் புரண்டேன் என்பதெல்லாம் உண்மைதான். ஆயினும் இன்னும் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு வாழ்ந்து வருகிறேனென்றால் அவ்வப்போது பாரதி பாட்டுக்கள் பலவற்றையும் எனக்கு நானே உரக்கப் பாடிக்கொள்வதால்தான்.

''மூட நெஞ்சே, முப்பது கோடி
முறையுனக் குரைத்தேன், இன்னுமொழி வேன்;
தலையிலிடி விழுந்தால் சஞ்சலப் படாதே;
ஏது நிகழினும் 'நமக்கேன்' என்றிரு;
பராசக்தியுளத்தின்படி யுலக நிகழும்;
நமக்கேன் பொறுப்பு?....

இவைபோன்ற பல பாடல் வரிகள் என்னை வழிநடத்திக் கொண்டு செல்கின்றன. எதற்காயினும் சரி — பாரதி நூல்களை எடுத்துப் படித்து ஊக்கம் பெற்றுக் கொண்டே இருக்கிறேன்.

**காந்தி ஆசிரமம் கிருஷ்ணன்**



''என்னடி பாவி மகளே...''

வள்ளியின் பார்வையில் பொங்கிய பயம், ஜானகியைப்பார்த்துப் பரிதாபமாகக்கெஞ்ச,

எங்கே பெண்டாட்டி எதையாவது உளறி விடுவாளோ என்ற பதற்றத்துடன் தானே பொரியத் தொடங்குகிறார் மூர்த்தி.

''அவ ஏன் பேசறா, என்னைக் கேளு. நான் சொல்றேன்... படிக்கிற பையன். சூது வாது தெரியாம வளர்த்திருக்கேன். அவன் ஏழைமைப் பெருக்கப் போற மாதிரி போய் — அவன் மனசையே கெடுத்திருக்கா. இன்னிக்கு அவன் கிட்ட இவளாவே வலியப் போய் என்னவோ பேச்சுக் கொடுக்க அவன் மிரண்டு போய் இவளைப் பிடிச்சுத் தள்ளியிருக்கான். காப்பி கொண்டுபோன அவன் அம்மா காலடியில் வந்து விழுந்தா இவ....''

''ஆங்!''

அம்மிணி திறந்த வாயை மூட மறந்து ஸ்தம்பிக்க — பதறிக் கொண்டு எழுந்த ஜானகியின் தோளைப் பிடித்து அமர்த்தி விட்டு மீண்டும் தொடருகிறார் மூர்த்தி.

''இங்கே பாரும்மா நடந்ததைச் சொல்லிட்டேன். அட, இன்னிக்கு இவளைக் கழுத்தைப் பிடிச்சுத் தள்ளின என் பிள்ளை நாளைக்கு இவகிட்ட முறை தவறி நடந்துடலாம் இல்லையா... சின்னப் பையன்... இளரத்தம். பின்னாடி வரப்போற அபாயம் கண்ணுக்குத் தெரியாது. யார் கண்டது? ஏதோ இன்னிக்கு அவன் அம்மா சமயத்துல வந்தாளோ நம்ம ரெண்டு பேர் மானமும் பொழச்சுது. மொதல்லே இவளைப் புருஷன் வீட்டுக்கு அனுப்பி வை. அடிச்சுக் கிடிச்சுச் செய்யாதே... எல்லாம் வயசுக் கோளாறு. கட்டினவனோட இருந்தா, மனசு இப்படி அலையாது...''

ஜானகி மரமாய் நின்று விட்டாள். அம்மிணி மகளின் தலை முடியைப் பற்றித் தரதரவென வீட்டுக்கு இழுத்துப் போவதையே பார்த்துக் கொண்டு...

''உஷ், இப்ப என்ன ஆயிடுச்சுன்னு இப்படி மலைச்சுப் போய் நிக்கறே... பி பிராக்டிகல்... சாயந்திரம் அந்தக் கிழவி வந்தா சம்பளத்தைக் கொடுத்து அனுப்பு. இனிமே வேலைக்காரி வைக்கிறப்போ பார்த்து வை. சின்னப் பொண்ணு வைக்காதே. அவளைச் சொல்லிக் குத்தமில்லே... ஏஜ்....''

அன்று மாலையே டிரைவர் வந்து சொல்கிறான்:

''அம்மிணி குடிசையிலே ஒரே கலாட்டாங்க... அந்தப் பொண்ணோட மூஞ்சியிலயும் முதுகுலேயும் சூடு காய்ச்சி இழுத்திருக்கான் அவ தகப்பன்... ஒரே அலறல்...''

இதைக் கேட்டதிலிருந்து எதுவுமே ஓடவில்லை ஜானகிக்கு. மறுநாள் பாரதி விழாவும், மேடை ஏறிப் பாட வேண்டியதும் இந்த அமர்க்களத்தில் மறந்தே போயிற்று.

இரவு வீடு திரும்பிய பிரபுவுடன் முகம் கொடுத்துப் பேசவில்லை அவள். மூர்த்தி தான் மகனை அழைத்து வைத்து அரை மணி நேரம் உபதேசித்தார்.

''இந்த மாதிரிப் பொம்பளைங்க கிட்ட எல்லாம் வம்பு வச்சுக்காதே பிரபு... சேரி ஜனங்களுக்கு விஷயம் தெரிஞ்சா ஒவ்வொருத்தனும் அரிவாளைத் தூக்கிட்டு வந்




# ஏந்நேரமும் காப்பியோ தேநீரோ பருகலாம், ஈகிள் கோஸி டீ பாட் இருக்கையிலே!




| மாடல்: | கீஷா | எக்ஸ்ப்ரெஸ்ஸோ | கார்ஸோம் | மைத்ரே | ஸ்டூவார்ட் |
|---|---|---|---|---|---|
| கொள்ளளவு: | 8 கோப்பைகள் | 4 கோப்பைகள் | 2 கோப்பைகள் | 5 கோப்பைகள் | 8 கோப்பைகள் |

காப்பியோ தேநீரோ அடிக்கடி தயாரிப்பது ஒரு விதத்தில் பெரும் பிரச்சனைதான். மீண்டும் மீண்டும் பாலைக் காய்ச்சுவது, வடிகட்டிய தேயிலை, காப்பித்தூள் இவற்றைக் களைவது, பாத்திரங்களைக் கழுவி சுத்தம் செய்வது, இவை போன்ற பல தொல்லைகள். இப் பிரச்சனைக்கு விடை காணுகிறது ஈகிள் கோஸி டீ பாட். ஒரே முறை தேநீரோ காப்பியோ தயாரித்து இதனுள் ஊற்றி வைத்திடுவீர். அவ்வளவுதான். பல மணி நேரங்களுக்கு விரும்பியபோது கமகம வென்ற மணத்துடன் தேநீரோ காப்பியோ பருகி மகிழ்ந்திடுவீர்.

இதனுள் இணைக்கப்பட்ட விசேட வாக்குவம் ப்ளாஸ்க் ரீஃபில், காப்பி, தேநீர் இவற்றை ஆவிபறக்கும் சூட்டில் பாதுகாத்தளிக்கிறது.





**ஈகிள் கோஸி டீ பாட். பல மணி நேரங்களுக்கு சூடாக வைக்கிறது.**

CASE-133-203 TAM

திடுவானுங்க. ஏதோ இந்தத் தடவை எப்படியோ சமாளிச்சேன். அதுவும் உங்க அம்மா உளறப் பார்த்தா... இந்தத் தடவை இந்த விஷயத்தைப் போனாப் போறதுன்னு விடறேன். இனிமே இப்படிச் செய்யாதே உனக்கென்ன ராஜா... நல்ல எதிர்காலம் இருக்கு. அதையெல்லாம் பாழாக்கிக்காதே.''

பிரபு மௌனமாய்க் கட்டிலில் அமர்ந்திருக்க, மூர்த்தி படுக்கைக்குத் திரும்புகையில் ஜானகி குப்புறப் படுத்திருந்தாள்.

மறுநாள்—

மனைவி சுடச் சுட வார்த்துப் போடும் தோசையை அனுபவித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்த மூர்த்திக்கு முதல் நாளைய சம்பவமே மறந்து போனதில் வியப்பில்லை.

ஜானகிதான் பேச்சை ஆரம்பித்தாள்.

''அந்தப் பொண்ணுக்கு அவ அப்பா சூடு போட்டிருக்கான்....''

''எந்தப் பொண்ணுக்கு?''

''என்ன இப்படிக் கேக்கறீங்க... அந்த வள்ளியைச் சொல்றேன். நம்ம பிள்ளையாலே அது பாவம் வெந்து புண்ணாயிருக்கு...''

''சரி, சரி விடு ஜானு...எல்லாம் போகப் போக....''

மூர்த்தி வார்த்தைகளை முடிக்கவில்லை... வந்ததே கோபம் ஜானகிக்கு... .முகம் தக்காளிப் பழமாய்ச் சிவக்க, கணவனின் முன் வந்து நிற்கிறாள்.

''எதை விடச் சொல்றீங்க... நீங்க தப்பு செஞ்ச காலத்திலே போகப் போகச் சரியாயிடும்னு விட்டு விட்டுத்தான் இன்னிக்கு இப்படி ஒரு பிள்ளைக்கு அம்மாவா தலை குனிஞ்சு நிக்கறேன். அன்னிக்கு நீங்க செஞ்ச தப்புக்கெல்லாம் உடம்பு முழுக்க சூட்டைக் காய்ச்சி இழுத்திருக்கணும். உங்க அப்பா அம்மா செய்யத் தவறிட்டாங்க. நான் தாலி கட்டிக்கிட்ட தோஷத்துக்காக அந்தப் பாவத்தைச் செய்ய முடியாம நின்னேன்... இதோ— இப்ப உங்க பிள்ளைக்கு சூடு போடலாம்னு... ச்சீ, அவனைத் தொட்டுச் சூடு போடக்கூட முடியாம நெஞ்சு .முழுக்க கசப்பை வெச்சுக்கிட்டுத் தவிக்கிறேன். இவன் பண்ணின தப்புக்கு எவளோ சூடு வாங்கணுமா?....''

''அதுக்கு இப்ப என்ன செய்யச்சொல்றே? என் மகனைச் சூடு காய்ச்சி இழுக்கச் சொல்றயா...''

மூர்த்தி இரைய,

''வேண்டாங்க, பெத்த பாவத்துக்கு என் வயித்திலே நானே சூடு போட்டுக்கறேன்....''

வெறித்தனமாய் அலறிய ஜானகியை மூர்த்தி ஓடிவந்து தடுப்பதற்குள்...

பழுக்கக் காய்ச்சிய தோசைக் கரண்டியால் அடிவயிற்றில் அவள் இழுத்துக் கொள்ள...

அப்பொழுதுதான் படுக்கையை விட்டு எழுந்து -வந்த பிரபு — அதிர்ந்துபோய் நிற்கிறான்.

அன்று மாலை ஜானகி இல்லாமலேயே பாரதி விழா....

அவளுக்கு உடம்பு சரியில்லை... என்பதை அறிந்து விசாரிக்க வந்த சிநேகிதிகளிடம்...

''நேத்துக் காலைல எழுந்திருக்கவே முடியாத தலை சுத்தல்... பிரஷர் எக்கச் சக்கமா ஏறிடுத்து... எழுந்திருக்கவே கூடாதுன்னுட்டார்... வெரி ஸாரி....''

கழுத்து வரை போர்த்தியிருந்த ஜானகி சிரித்தபடி சொல்கிறாள்... தலைமாட்டில் அந்தக் கவிதைத் திரட்டின் அட்டையில் இருந்த கவிஞன் புன்னகைக்கிறான்...

'பொட்டை நெட்டுரு அடித்ததிலேயே உனக்கு இத்தனை ரோஷம் வந்துவிட்டதோ' என்று....

## பூட்டைத் திறப்பது...!

● நானும் என் மனைவியும் ஒரு நண்பனின் திருமணத்துக்குச் சென்றிருந்தோம். நலங்கு விளையாட வேண்டிய நேரம் வந்தது. நலங்குக்கு வேண்டிய சாமான்கள் ஓர் அறையில் தயாராக வைத்து, அந்த அறையைப் பெண் வீட்டார் பூட்டி வைத்திருந்தார்கள். சாவியை எங்கேயோ மறதியாக வட்டு விட்டனர்.




எல்லோரும் நலுங்குச் சாமான்களை எப்படி எடுப்பது என்பது புரியாமல் தவித்தனர். உடனே என் நண்பன் என்னிடம் 'டேய் நீதாண்டா ஏதாவது செய்து பூட்டைத் திறக்கணும்' என்றான். உடனே எனக்கு மகா கவி பாரதியாரின் கவிதை வரிகள் ஞாபகம் வந்தன. அதைப் பாடிக் கொண்டே பூட்டைத் திறந்தேன். அதைக் கேட்டுக் கூடியிருந்தவர்கள் எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள் —மணமக்கள் உள்பட! அந்த வரிகள்:

''பூட்டைத் திறப்பது கையாலே — நல்ல
மனத் திறப்பது மதியாலே
பாட்டைத் திறப்பது பண்ணாலே — இன்ப
வீட்டைத் திறப்பது பெண்ணாலே.''

இப்போதும் என் நண்பன் வீட்டுக்குச் செல்லும்போதெல்லாம் இந்த வரிகளைப் பாடிக்கொண்டுதான் அவனும் அவன் மனைவியும் என்னை வரவேற்பார்கள்.

- ந. தியாகராசன்



# ஒப்பிட்டுப்பார்க்க, உடனொத்த பானங்களின் விலைகள் (ரூ.). வனையாக் கலத்துப் பேக்கிங்.

நியூட்ரமுல். அமுல் படைப்பு. உச்சத் தரத்திற்கு இதுவே உத்தரவாத நற்சாட்சி. கோக்கோ ஆட்சி. ஆரோக்கியமிகு அமுல் பால். அருமையான மால்ட். அத்தியாவசிய வைட்டமின்கள், உலோக தாதுக்கள். ஒருங்கே பலம்பெருக்கும் பண்புகளின் சிகரம்.

இவ்வளவுக்கும் விலை, வேறெதனையும் விட சுமார் 4 ரூபா குறைவு.

மிடுக்குடன் நடப்பீர் நியூட்ரமுல் வீரராய்... மிஞ்சும் பணத்தோடு.

வேறெதனையும் விட சுமார் 4 ரூபா விலை குறைவு.

நியூட்ரமுல் விலையோடு ஒப்பிட, உடனொத்த பானங்களின் விலைகள் (ரூ.)*
நாந் ஃப்ளெக்ஸியின் பேக்கிங்

| | 500 கிராம் | 800 கிராம் | 1000 கிராம் |
|---|---|---|---|
| நியூட்ரமுல் டின் | 13.83 | – | 26.67 |
| மால்டோவா புட்டி | 17.58 | – | – |
| போர்ன்விடா டின் | 17.68 | 26.97 | – |
| பூஸ்ட் புட்டி | 18.87 | – | – |

* '81 மார்ச் நிலவரப்படி, அனுபோகியருக்கான உச்சவிலைகள். தல வரிகள் தனி.















இப்போது 1000 கிராம்



குஜராத் கோ-ஆப்பரேட்டிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட், ஆனந்த் 388 001

daCunha/81/GCM/53/TM

# ஊமைச் சனங்களடி



(இந்தக் கதையில் வரும் பெயர்கள் யாரையும் குறிப்பிடக் கூடாது. நிகழ்ச்சிகள் சத்யமாகக் கற்பனையே!)

உஸ்....
பேசக்கூடாது....
கி.பி. கி.மு.க்களெல்லாம்
வரலாற்றின் அறுப்புக்கள்!
இது க.பி.!

விடுகதைக் கதையை
வேதாளம் விட்டது!
விடை கொடுங்கள்
அல்லது
விடைபெறுங்கள்!
அது இது....
ஆதிக்கபுரத்தில்
அப்பாவின் கல்யாணம்.
பாதிப்பா?
யாருக்கு?
ஏற்கனவே 'மணி' அதிகம்!

இந்த 'அப்பா'
உடையார் ஜாதி
இல்லவே இல்லை
உடைப்பார் ஜாதி.

பாகம் பிரியார்
பரமசிவன்
சாமிகளே அப்படித்தான்
பாகம் பிரியார்!

அந்தக் 'கொள்''கை'க்குத்தான்
இந்தக் கல்யாணம்!

பாலிகர் தேசத்துப்
பிரஜைகள்
ஏறக்குறைய, பலரும்
அப்பா என்று
அழைக்கிறார்கள்.

இவருக்கு.
கல்யாணம் நியாயமா?
கலாட்டா 'குமாராக!'
கிழ மாப்பிள்ளை
கிருஷ்ணசாமிக்கு.

**நடிப்புச் சுதேசிகள்**

அச்சமும் பேடிமையும் அடிமைச் சிறுமதியும்
உச்சத்திற்கொண்டார டீ - கிளியே!
ஊமைச் சனங்கள டீ.

-பாரதியார்





000

## ராகம் : மாலன்
## தாளம் : ம.வே.பசுபதி

அழுகைக் கண்ணீர்த்
துளிர்க்கவில்லை!

தத்துப் பிள்ளைதான்
தாண்டினார்!
தத்துப் பிள்ளை
தம்பித் துரை!

தத்துப் பிள்ளைதான்
தத்துப் பித்து — அல்ல.
சொத்துப் பத்துக்காக
தத்தும் சித்து — அல்ல!
(ஏனென்றால்
எதுகை மோனை
இவருக்கு முக்கியம்)

கல்யாண மகோற்சவ
சந்தர்ப்பம் — ஒரு
தனிக் குடித்தனத்தை
ஜனிக்க வைத்தது.

உஸ்....
பேச்....மூச்....
இது க.பி.
தத்துப் பிள்ளை
தன்
திமுதிமுவென்னும்
சப்தஜால கிரகத்தில்
அப்பாவுக்காகவே
'பெத்த' 'சூர்ச்'
வைத்திருந்ததாகவும்
கேள்வி!

பாலி தேசத்தில்
ஆங்கில மோகம்
அந்த நாள் முதலே
அதிகம்!
அதனால்.
17 ஆவது அட்சரம்
பிறப்புரிமை யாகிவிட்டது.

க்ஷ
பாவம்
வளைந்து போகிறது
சூன்யத்திற்கு!
பிரளய பஞ்சத்தில்
பிரபஞ்சம்
இதைத் தெரிசித்தது!
தம்பி துரையார்
அப்படி இப்படியென்று
இல்லாமல் பொடிவைத்து
எப்படியோ சொன்ன



சூட்சமம்
பாலிதேசத்தை
வெகுவாகக் கவர்ந்திருக்க
வேணும்!

வாத்சல்யமான
வயலின் ஓசை கேட்டது!
மரியாதை ராஜாவின்
மகிழ்ச்சி ஆசீர்வாதம்!
இவரே,
'திரி'யுள்ள வேலைக்கு
'முதல்' போட்ட வேலைக்குச்
சரியான ஆள் என்று
சம்மதித்தார் பாலிமக்கள்!
ஐயோ பாவம்
இசம் வென்றது
நிசம் நின்றது
வசம் சென்றது!
ரத்த தானம், கண் தானம்
மெத்தச் செய்யவில்லை, அவர்!
ஆனால்,
இதயத்தை மட்டும்
யாருக்கோ
அதிரகசியமாக
அதுவும் கடனாக....!
கடன் பெற்ற பேர்வழியைக்
கண்டு பிடிப்பதிலே
கடமுடா சத்தங்கள்
கைகலப்பா?.... இருக்காது!
உஸ்....
பேச்...மூச்....
இது க.பி.

பெரும் பாண்டியரின்
நுணுக்கமுள்ள முனைகள்
துரும்பாயிற்று!
கடன் கணக்கு
தூளாயிற்று!
அருட்செல்வர் அவர்களே
அரியாசனத்தில்!
அறியா சனங்களா
அதனை அளித்தார்கள்?

பாண்டியரைப் புறங்கண்ட
சோழர்
வேண்டுதல்படியே
திருப்பணிகள் செய்தார்!
திருப்பணியா?
பாலிகர் பாரம்பர்யம்?
உஸ்...மூச்...பேச்... இது. க. பி.
மூலாதாரக் கொள்கை
பத்யமாகிறது!
காலாதாரத்தில்
அநுக்ர மூர்த்தியே
விக்ரகம் ஆனார்!

பாடல்பெற்ற ஸ்தலங்களின்
பட்டியல் நீண்டது!
ஆடல் பாடல் மிகுந்த
உற்சவம் ஏராளம்!
தேவாலய நிர்மாணங்களில்
சகோதர கபிட்சங்கள்!
பாலிதேசப் பிரஜைகள்
வேடிக்கை பார்த்தார்கள்!

''மனிதனையே கடவுளென
மாற்றி உயர்த்திவைத்த
புனிதனே'' என அவரைப்
புகழ்ந்துதுதித்தார்கள்!
'சொத்தை விட்டால்
சொத்தை' என்னும்
தத்துவம் கண்ட சாமியார் திருமணம்!

பற்றவேண்டியதைப்
பற்றிக்கொண்ட
கற்றவர் திறமை!
அவரையே கடவுளாய்
ஆக்கி
மூலவர் மந்த்ரம்
மூலையில் வைத்த
சாலப் பெரியவர்
சரித்திரம்...!
இதிலே
மெத்த மெத்த
புத்திசாலித்தனம்
எது?

விடை கேட்டது
வேதாளம்!
விக்ரம் சொன்னான்.
'பாலி தேசத்துப்
பரம சாதுக்கள்தாம்
மகாசனங்கள்தான்!
எல்லாவற்றையும்
பார்க்கும் இவர்கள்
ஏமாளிகளே அல்ல...
ஆண்டவன் செய்யும்
அநுக்கிரகத்தைவிட
ஆளவந்தாரின் அநுக்ரகம் முக்கியம்.
அந்த ரகசியம்
அறிந்திருக்கின்ற
பாலிகர்தானே
புத்திசாலிகள்!''
விக்ரம் சொன்னதும்
வேதாளம்
விக்கித்து
'விடை' பெற்றது.

## நெஞ்சு பொறுக்குதில்லையே!

கடந்த வாரம் என்னுடைய எம்ப்ளாய்மெண்ட் கார்டைப் பதிவு செய்வதற்காக வேலை வாய்ப்பு தேடித் தரும் நிலையத்துக்குச் சென்றிருந்தேன். அலுவலகத்தில் அவர்கள் செய்யும் வேடிக்கை கொஞ்சம் நஞ்சமல்ல.

'அப்படியே வெளியே நில்'. 'அந்தக் குமாஸ்தாவைப் பார்' — துளியும் மரியாதையின்றி மாடுகளை விரட்டுவது போல் பேசும் போது — நெஞ்சு பொறுக்குதில்லையே...

இன்று நம் இந்திய நாட்டில் இப்படி ஆயிரமாயிரம் இளைஞர்களின் அவலநிலையை நினைக்கும்போது என் நினைவில் தட்டும் பாரதியின் கவிதை வரிகள்:

''நல்லதோர் வீணை செய்தே — அதை
நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ?
சொல்லடி சிவசக்தி — எனைச்
சுடர்மிகு அறிவுடன் படைத்துவிட்டாய்.
வல்லமை தாராயோ — இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே''

-பி. வேணுகோபால்






"தலைமுறை தலைமுறையாக மக்கள் பயன்படுத்திவரும் இந்திய மருந்துகளின் சக்தியே தனி...

அவற்றுள் தனிச்சிறப்பு வாய்ந்தது அமிர்தாஞ்சன்."

தலைமுறை தலைமுறையாக மக்கள் நம்பிக்கையோடு பயன்படுத்திவரும் அமிர்தாஞ்சன் பத்து மருந்துப்பொருள்கள் அடங்கியது. இவை பத்தும் இயற்கையின் அற்புதமான சக்திவாய்ந்த மருந்துகள். அதனால்தான் அமிர்தர்ஞ்சன் ஒரு சக்திமிக்க வலி நிவாரணியாக விளங்குகிறது.

இதன் பயனாக தலைவலி, ஜலதோஷம், உடல்வலி, சுளுக்கு இவை எல்லாவற்றுக்குமே அமிர்தாஞ்சன் விரைவாக நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. அமிர்தாஞ்சன் உபயோகிப்பதால் ஆபத்து இல்லை. இதனால் வேறு தீய விளைவுகள் எதுவும் ஏற்படாது.

**அமிர்தாஞ்சன் — 80 ஆண்டுகளுக்கும் மேலாகப் பல குடும்பங்களில் பயன் பட்டுவரும் நம்பகமான மருந்து.**

# அமிர்தாஞ்சன்

**தலைவலி. ஜலதோஷம். உடல்வலி. சுளுக்கு — அனைத்தையும் போக்க அருமையான மருந்து.**



AM-2148

# ரூபா



அன்பிற்கினியவன்

2

"ஆமாம் மிஸ் உமா. ஐயம் டிடெக்டிவ் முகேஷ்!"

மிரட்சியுடன் அவனைப் பார்த்தாள்.

"ஏன் சார்? ரூபா என்ன ஆனாள்? நீங்கள் இவ்வளவு தூரம் வந்திருப்பதைப் பார்த்தால்—"

"இப்போதைக்கு எதுவும் யூகமாகக்கூட என்னால் சொல்ல முடியாது. ஆரம்பக்கட்டங்களில் இருக்கிறேன்."

"அவளைப் போன்ற ஒருத்தியைத் தோழியாகப் பெறுவது கஷ்டம்!" சொல்லும்போதே உமாவுக்குக் கண்ணீர் பெருகிவிட்டது.

"விஷயத்தை நீங்கள் யாரிடமும் சொல்ல வேண்டாம் உமா. புதிய பிரச்னைகளும் சிக்கல்களும் உண்டாகிவிட ஏதுவாகிவிடும்."

"பிராமிஸ்! மூச்சுவிட மாட்டேன் சார்!"

"ரூபாவின் உடைமைகளை நான் பார்க்க வேண்டுமே?"

"அதோ இருக்கிறதே..." — அடுத்த அறையைக் காட்டினாள் உமா. "அந்த பீரோ ஒன்றுதான் சார். அதன் ஒரு சாவி அவளிடம் எப்போதும் இருக்கும். மற்றொன்றை என்னிடம் கொடுத்திருக்கிறாள்."

"உங்களுக்கு எதற்கு? நீங்களும் அந்தப் பீரோவை உபயோகிக்கிறீர்களா?"

"இல்லை. அவளிடமுள்ள ஒரு சாவி ஒரு வேளை தொலைந்து விட்டால் மாற்றுச் சாவி வேண்டுமல்லவா? அதற்காக என்னிடம் தந்திருக்கிறாள்."

"பொதுவாக ரூபா எப்படிப்பட்டவள்?"

"யாரிடமும் கலகலப்பாகப் பழகுவாள் சார். ஆண் பெண் என்ற வித்தியாசமே கிடையாது அவளுக்கு. சினிமா என்றால் உயிர். விதம் விதமாக உடுத்திக்கொள்வாள்."

"அலுவலகத்தில் இவளுக்கு விரோதிகள் அல்லது இவளிடம் தகராறு செய்பவர்கள் யாராவது உண்டா?"

"இவளிடமா? என்னைப் போன்ற பெண்களே இவளைச் சிநேகமாக்கிக் கொள்ள வேண்டும் என்று ஆசைப்படும்போது யார் சார் இவளிடம் விரோதித்துக் கொள்ளப் போகிறார்கள்? ஒருவரோடொருவர் போட்டி யிட்டுக் கொண்டுதான் அவளிடம் பழகினார்கள்!"

"யாரிடமாவது இவளுக்குக் காதல்?"

"அதெல்லாம் கிடையாது. என்னிடம் ஒளிவு மறைவில்லாமல் எல்லாவற்றையும் சொல்பவளாயிற்றே! அப்படி ஏதாவது இருந்தால் என்னிடம் நிச்சயம் சொல்லியிருப்பாள்! ஆனால்...."

"சொல்லுங்கள்!"

"மதன் என்பவரிடம் இவளுக்குப் பழக்கம் அதிகம் உண்டு. இருவரும் காதலர்கள் அல்ல. நண்பர்கள்." — நண்பர்கள் என்று சொன்னபோது ஓர் அழுத்தம்.

"மதன்? அவரைப் பற்றிக் கொஞ்சம் விரிவாய்ச் சொல்ல முடியுமா?"

"ஷ்யூர்! இருபத்தேழு வயதிருக்கும். எவரையும் கவர்ந்திழுக்கும் பெண்மை கலந்த முகம். இனிய சுபாவம். யஷ்வந்த்பூரில் வேலையில் இருக்கிறார். அடிக்கடி அவர் இங்கு வருவதுண்டு. அவரும் ரூபாவும் சேர்ந்து ஷாப்பிங், சினிமா போவதுண்டு."

"மதன் சமீபத்தில் ரூபாவைத் தேடி வந்தாரா?"

"இல்லை."

"கடைசியாக எப்போது இங்கேவந்தார்?"

உமா யோசித்தாள். கண்களை மூடிக் கீழ் உதட்டைப் பற்களால் அழுத்தினாள்.

"ரூபா விடுமுறையில் ஊருக்குக் கிளம்புவதற்கு முதல் நாள் வந்தார்."

"அப்படியானால், ரூபா விடுப்பு எடுத்திருப்பதும், மதுரைக்குப் போகப் போவதும் மதனுக்குத் தெரியும்?"

"தெரிந்திருக்கிறது. என் எதிரில்தான் ரூபா சில நாட்களுக்கு முன்னதாக மதனிடம் சொல்லியிருக்கிறாள்!"

"லீவு முடிந்ததும் ரூபா திரும்பி வந்திருப்பாளென்று மதன் மறுபடியும் இங்கு வந்திருக்க வேண்டுமே! ஏன் வரவில்லை?"

"தெரியவில்லை!" வறட்சியான பதில்.

"யஷ்வந்த்பூரில் எந்த ஆபீசில் அவருக்கு வேலை?"

"அந்தக் கம்பெனியின் பெயர் ஞாபகமில்லை. அக்ரிகல்சரல் அலுவலகத்துக்கு அடுத்து இருக்கும் கம்பெனி என்பது மட்டும் ஞாபகமிருக்கிறது."

"எப்படி ஞாபகமிருக்கிறது?"

"ம்..." அவனை முறைத்தாள். "ரூபா தான் எப்போதோ ஒரு முறை என்னிடம் சொன்னாள்."

அவளிடமிருந்து மற்றொரு சாவியை வாங்கி, ரூபாவின் பீரோவைத் திறந்தான் முகேஷ். குப்பென்று இனிய வாசனை உடலைப் புளகாங்கிதம் அடையச் செய்தது. இளம் பெண்ணின் பலவித வண்ண உடைகள்... ப்ளவர் டஸ்ட் பைகள்... மூலையில் ஒட்டலில் பில்களைக் குத்தி வைத்திருப்பது போல் ஒரு நீண்ட மெலிதான கம்பியில் கடிதங்கள்.

ஒரு புகைப்படம் இருந்தது. இளைஞன் ஒருவன் சிரித்துக் கொண்டிருந்தான். மதன் என்று கையொப்பமிட்டிருந்தது. மறுபடியும் பீரோவைப் பூட்டினான். பின்னர் மௌனமாகப் பீரோ சாவியைப் பக்கத்து அறையிலிருந்த உமாவிடம் திருப்பிக் கொடுத்தான்.

''எங்கள் அலுவலகத்திலிருந்து ரிஜிஸ்தரில் ரூபாவுக்கு மதுரை முகவரிக்கு ஒரு தபால் போயிருக்கிறது.''

''என்ன விஷயமாக?''

''லீவு முடிந்தும்கூட அலுவலகத்துக்குத் திரும்ப வராத காரணம் கேட்டு!''

''தேங்க்யூ உமா. உங்கள் ஒத்துழைப்புக்கு மிக்க நன்றி'' — வெளியேறும்போது ரூபாவும் உமாவும் இணைந்து எடுத்துக் கொண்ட புகைப்படம் சுவரில் தொங்கக் கண்டான்.

அடுத்து மதனைச்சந்திக்க வேண்டும் அவன்.

இருட்டிவிட்டது. இனி முடியாது. அலுவலகம் பூட்டப்பட்டிருக்குமே! காலையில் பத்து மணிக்கு மேல்தான் முயல வேண்டும்!

ஆனால்—

மறுநாள் காலை பத்து மணிக்குத் தவிப்புடனும் அவசரத்துடனும் மதனின் அலுவலகத்தைத் தேடிக் கண்டு பிடித்து, அவனைப் பற்றி விசாரித்ததில் அவன் நீண்ட விடுமுறையில் இருப்பதாகத் தகவல் கிடைத்தது.

எத்தகைய ஏமாற்றம்! மௌனமாக மதுரைக்குத் திரும்பினான்.

பச்சை நிறத்தில் வருக வருக என்று அழைத்துக் கொண்டிருந்தது அந்தச் சிறிய பங்களா. உள்ளே நுழைந்து எதிர்ப்பட்ட ஒரு வேலையாளிடம் தன் விசிட்டிங் கார்டைக் கொடுத்துவிட்டுக் காத்திருந்தான் முகேஷ்.

அடுத்த நிமிடத்திலேயே பீதாம்பரம் வெளிப்பட்டு விட்டார்.

''வாருங்கள் முகேஷ்!''

உள்ளே கூட்டிச் சென்றார்.

இருவரும் எதிரெதிரே உட்கார்ந்தார்கள்.

அருமையான அறை. ஏ.சி. செய்யப்பட்டு விசாலமாக அமைக்கப்பட்டிருந்தது. கண்ணைப் பறிக்கும் வண்ணச் சுவர். டிஸ்டெம்பர். இரண்டு பீரோ நிறைய தலையணைப் புத்தகங்கள். ஏதோ ஒரு மனத்துக்கினிய வாசனை!

''ரூபா எப்போதிருந்து காணவில்லை என்று சொன்னீர்கள்?'' முகேஷ் கேட்டான்.

''சில நாட்களாய்!''

''இல்லை. அவள் காணாமல்போய்க் கிட்டத்தட்ட இரண்டு மாதங்கள் இருக்கலாம்!''

''என்ன!'' பதறிவிட்டார் பீதாம்பரம்.

''உண்மை. பெங்களூருக்கு அவளுடைய அலுவலகத்துக்குச்சென்று விசாரித்ததில்இந்த யூகத்துக்குத்தான்நான்வரமுடிந்திருக்கிறது.''

மௌனமாகச் சோகமானார் பீதாம்பரம்.

''சமீபத்தில் நீண்ட லீவில் வந்திருந்தாளாமே?''

''ஆமாம்.''

''எந்த மாதம்?''

''அக்டோபர். இரண்டு மாத லீவு.''

''இரண்டுமாதத்தையும்உங்களுடனேதானே இருந்து கழித்தாள்?''

''இல்லை. அக்டோபரில் மட்டுமே என்னுடன் இருந்தாள். நவம்பர் முதல் வாரத்தில் மீனுவிடம் போய் விட்டாள்.''

''அது யார்-மீனு?''

''ரூபாவின் அக்கா. என் மூத்த மகள். கணவனுடன் சென்னையில் இருக்கிறாள்.''

''மீனுவுக்கு எந்த ஆபீசில் வேலை?''






**வேடிக்கை மனிதரைப் போல — நான்**
**வீழ்வே னென்று நினைத்தாயோ?**

திருநெல்வேலி மாவட்டத் தமிழ்க் கவிஞர் மன்றம் 11–10–81ல் ஒரு சிறப்பு நிகழ்ச்சியை எட்டயபுரத்தில் ஏற்பாடு செய்திருந்தது.

நாடு முழுவதிலுமிருந்து நூறு கவிஞர்கள் வரவழைக்கப்பட்டிருந்தனர்! மகா கவிக்குப் 'பாரதி' பட்டம் சூட்டப்பெற்ற எட்டயபுரம் மகாராஜா அரண்மனையிலிருந்து காலை ஒன்பது மணிக்குக் கவிஞர்கள் ஊர்வலமாகச் சென்று பாரதியின் வீட்டுக்கு முன்னே அமைக்கப்பட்டிருந்த வேள்விக் கூடத்தில் (அரங்கில் அல்ல) அமர்ந்தனர். நான் முழுமையும் மகா கவியைப் பாடிப் பரவிப் போற்றும் 'பாரதி கவிதா வேள்வி'யைக் கவியோகி சுத்தானந்த பாரதியார் தொடங்கி வைத்தார். கவிஞர்கள் தங்கள் கவிதையை வேள்விப் பொருளாக்கி அஞ்சலி செலுத்தினர்.

நூற்றுக் கவிஞர்களில் ஒருவனாகும் பேறு எனக்குக்கிட்டியிருந்தது. கவிதையை வேள்விப் பொருளாக்கி மகிழ்ந்த நான், கம்பிக் கிராதிகளால் வளையப் பெற்ற பாரதியாரின் வீட்டுக்குள் மனம் சிலிர்க்க நுழைந்தேன். வராந்தாவைக் கடந்து, ஹாலினுள் சென்றதும், வலப் பக்கம் மலர்க் குவியலின் மேல் வைக்கப்பட்டிருந்த பிரம்மாண்டமான பாரதியின் படத்தை உள்ளக் கிளர்ச்சியுடன், உடலெங்கும் புல்லரிக்கத் தரிசித்து நின்றேன். அந்த வேளையில் அம்மாபெரும் கவிஞனின் சில வரிகள் நெகிழ்ச்சியை ஊட்டின.

''தேடிச் சோறுநிதந் தின்று — பல
சின்னஞ் சிறுகதைகள் பேசி — மனம்
வாடித் துன்பமிக உழன்று — பிறர்
வாடப் பலசெயல்கள் செய்து — நரை
கூடிக் கிழப்பருவ மெய்தி — கொடுங்
கூற்றுக் கிரையெனப் பின்மாயும் — பல
வேடிக்கை மனிதரைப் போலே — நான்
வீழ்வே னென்றுநினைத் தாயோ?''

சராசரி மனித வாழ்வை, அற்புதமாக அளவிட்டுக் காட்டிய மகா கவிஞன் அதனை வென்றும் காட்டினானல்லவா?

— குன்றக்குடி பெரிய பெருமாள்

''அவன் வேலை செய்யவில்லை.''

''ஓகோ! மீனாவின் கணவருக்கு?''

''ஒரு பர்னிச்சர் மார்ட் வைத்துச் சொந்தமாகவே நடத்தி வருகிறார்.''

''அவரது முகவரி தருகிறீர்களா?''

பீதாம்பரம் தந்தார்.

''ஒரு விஷயம்...'' தயங்கினார்.

''சொல்லுங்கள்!''

''ரூபா காணாமல் போய் இரண்டு மாதம் ஆகிவிட்டதென்று நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால் சென்ற டிசம்பர் மாதம் 26ம் தேதி அவளிடமிருந்து கடிதம் வந்ததே?''

''டிசம்பரிலா?'' திரும்பவும் கேட்டான்.

''ஆமாம்.''

குழப்பமாகி விட்டது முகேஷுக்கு.

''என்ன எழுதியிருந்தாள்?''

''விசேஷமாக ஒன்றும் இல்லை.''

''அந்தக் கடிதத்தைத் தர முடியுமா?''

''தருகிறேன்.''

பீதாம்பரம் எழுந்தார். கடிதக் கற்றைகளைத் தூசி தட்டி ரூபாவின் டிசம்பர் கடிதத்தை எடுத்தார். முகேஷிடம் தந்தார்.

பார்த்தான். பீதாம்பரம் சொன்னது உண்மை. அவருக்குத்தான் ரூபாவால் எழுதப்பட்டிருந்தது. தபாலாபீஸ் முத்திரையைப் பார்த்தான். 26–12–77ல் பெங்களூர் முத்திரை. 28–12–77 மதுரைமுத்திரை!

தன்னிடமே பத்திரப் படுத்திக் கொண்டான் அதை. ஏற்கனவே பெங்களூரில் ரூபாவின் பீரோவிலிருந்து எடுத்திருந்த சில கடிதங்கள் வேறு.

''சரி!'' திரும்பினான் முகேஷ். ''அடுத்த முறை உங்களைச் சந்திக்கும்போது ஏதாவது புதிதாய்ச் செய்தி சொல்லுவேன்.''

''சொல்லுங்கள் முகேஷ். அது நல்ல செய்தியாக இருக்கட்டும். என் மகள் எங்கிருந்தாலும் சரி. நலமாக, பத்திரமாக இருக்கட்டும். பாவம் — தாயில்லாதவள்'' — பாசத்தால் உருகினார் பீதாம்பரம்.

தன் அறைக்கு முகேஷ் திரும்பியபோது அவனை ஒரு கடிதம் வரவேற்றது.

தேவ் எழுதியிருந்தான் ஹைதராபாத்திலிருந்து.

தேவ் மதுரைக்காரன். சிம்மக்கல். முகேஷுடன் கல்லூரியில் ஒன்றாகப் படித்ததில் நெருங்கிய நட்பு. அந்த உரிமையில் 'கன்னுபின்னு' என்று இவனைத் திட்டுவான்.

இவனுக்கு முதலில் பதில் எழுதித்தொலைக்க வேண்டும்.

மேசையைத் திறந்து தாளை எடுத்தான்.

மூளையில் திடீரென்று ஒரு பொறி. அதன் படி—

'விருவிரு'வென்று எழுதினான். ரூபாவின் பீரோவிலிருந்து எடுத்திருந்த மதனின் போட்டோவையும், எழுதிய தாளையும் கவருக்குள் வைத்து ஒட்டினான். தெருக் கோடியிலுள்ள அஞ்சல் பெட்டியின் வாயில் திணித்தான்.

அறைக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தபோது—''ஹாய் முகேஷ்!'' என்ற பழக்கமான குரல்.

நின்றான். திரும்பிப் பார்த்தான்.

(தொடரும்)



# நீதி பிழைத்தது ✱

● டைரக்டர் எஸ். ஏ. சந்திரசேகரன்; ஹீரோ விஜய்காந்த். ஆகவே பழிவாங்கும் கதை என்று பாப்பாவுக்கும் தெரியும். இந்த அற்புதக் கதையை எழுதியவர் ''பாசமலரை' எழுதின அதே கோட்டாரக்கராதான்.

விஜய்காந்துக்கு ஒரு அட்வைஸ் — ''கொஞ்சம் நடிக்கவும் முயலுங்களேன்'' சோகக் காட்சியில் பாவத்தை வெளிக்காட்ட முடியாமல் விழிப்பதும், கண்களை உருட்டி முழிப்பதும், தோளைக் குலுக்குவதும் கேலிக் கூத்தாய் இருக்கின்றன. 'ள'வைச் சரியாய் உச்சரித்தல் இவருக்குப் பயன் தரும் (''என் மனைவியைக் கொன்னுட்டாங்கலே)''. வில்லனாய் ஜெய்சங்கர் அலட்டாமல் நடிக்கிறார். ஸ்மிதா படு கவர்ச்சியாய்த் தோன்றி ஆடிப் பாடி விசில்களைச் சம்பாதிக்க, குண்டு உமாவும், ஒல்லி அருணாவும்... பாவம் விட்டு விடுவோம். கவரும் ஒரே நபர் கண்ணாடி யணிந்த துப்பறியும் ரவிகுமார்தான். கீப்-இட்-அப்!

புலவர் முத்து பாரதியின் புலமையை இரட்டை அர்த்த வசனங்களிலா காட்டுவது? ரொம்ப ஓவர்! பழைய கேள்விதான், சலிக்காமல் கேட்கிறேன். ''சென்சார் தூங்குகிறதா?'' சண்டைக் காட்சிகளில் ஒவ்வொரு குத்துக்கும் பயங்கரமான ஓசைகளை எழுப்பிக் கொண்டு, சிக்கு, சிக்கு... தம், தம்... என்று பாடல்களும் போட்டிருக்கிறார்கள் சங்கர் கணேஷ். பாடல் காட்சிகள் மகா போர்!

படத்தில் சென்ஸிபிளாக ஏதாவது ஒரு காட்சி இருக்கிறதா? சத்தியமாய் இல்லை. உதாரணத்துக்கு ஒன்று. இறந்து கிடக்கும் மாலா (ஸ்மிதா) கையில் கொலையாளியின் செயின் இருக்கிறது. படம் பார்ப்பவர்கள் அனைவருக்கும் அது யாருடையது என்று நன்றாகத் தெரியும். ஆனால் டைரக்டருக்குத் தம் திறமை மீதும், நம் ஐ. க்யூ. மீதும் நம்பிக்கை இல்லை. ஆகவே மாலை அணிவிக்கப்படும் காட்சி மீண்டும் ஃப்ளாஷ் பேக்கில். அவன் பிடிக்குள் செயின் எப்படி வந்தது? சரி! மீண்டும் ஒரு ஃப்ளாஷ் பேக்கில் அவன் அவளைக் கொல்ல, அவள் திமிற, பிடிக்குள் வருவது அறுபட்ட சங்கிலி! அப்பாடா! புரிந்ததா?

—சிந்து ஜீவா



# நான் வளர்த்த மனிஷா

● எதிர்ப்பு அணி: விசேஷமாய்ச் சொல்ல என்ன இருக்கிறது?
தரப்பு அணி: ஒன்றுமில்லே!
தீர்ப்பு: தெலுங்கிலிருந்து 'டப்'பாய் வந்த டப்பாப் படம்.

-நளினி சாஸ்திரி

# எந்த சந்தர்ப்பத்தில் பாடல்?

● விவாகம் முடிந்தவுடன் கணவன் மனைவி பேசுவது கூட வழக்கம் இல்லாத அந்தக்காலத்திலே, எல்லோருக்கும் எதிரில், மனைவியை நோக்கி, பாரதி காதல் பாட்டுப் பாடினார்:

''தேடக் கிடைக்காத சொன்னமே!—உயிர்ச் சித்திரமே! மட அன்னமே!

. . . . . . . . . . . . . . . . . . . . . . . .

. . . . . . . . . . . . . . . . . . . . . . . .

. . . . . . . . . . . . . . . . . . . . . . . .

கட்டியணைத் தடுதொரு முத்தமே — தந்தால் கைதொழுவேன் உனை நித்தமே!''

என்பதுதான் அது!



ரவிச்சந்திரன்

● ஒருமுறை பாரதியின் இளைய மகள் 'சகுந்தலா—பாரதி' தன் தாய் செல்லம்மாள் சொல்வதைக் கேட்காமல் மறுத்து, ஏதோ சொல்ல, அப்போது அங்கிருந்த பாரதி, 'தாய் சொல்லைத் தட்டாதே பாப்பா' என்று பாடினாராம். (சகுந்தலா பாரதியை பாரதி 'பாப்பா' என்றே அழைப்பது வழக்கம்.) உடனே சகுந்தலா 'நான் என்னென்ன செய்ய வேண்டுமோ அதற்கெல்லாம் இப்போதே ஒரு பாட்டு எழுதிக் கொடு' என்று நச்சரிக்க ஆரம்பித்து விட்டாள். அப்படிப் பிறந்தது

ஓடி விளையாடு பாப்பா — நீ
ஓய்ந்திருக்கலாகாது பாப்பா

என்று தொடங்கும் பாடல்.

● மலைச்சாரலும் அருவிகளும், தோட்டங்களும் நிறைந்த பசுமையான கிராமம் கடையம். கடையத்துக்கருகே 'வாசகிரி' என்ற ஒரு குன்று முருகன் கோயிலும், சுனையும் கொண்டு ரம்யமாயிருக்கும்.

. கடையத்தில் நித்ய கல்யாணி அம்மன் கோவிலுமுண்டு. பாரதி கவிதை எழுதவும், படிக்கவும், அங்கேயெல்லாம் சுற்றிக் கொண்டே இருப்பாராம். அங்கே பாடியதுதான்,

'காணி நிலம் வேண்டும் — பராசக்தி
காணி நிலம் வேண்டும்'

பாடல் என்று சொல்லப்படுகிறது. (இதைப் புதுவையில் பாடினார் பாரதி என்றும் சிலர் சொல்வர்.)

● அந்த ஊரில் மார்கழி மாதத்தில் அதிகாலை நேரத்தில் பஜனைக் கோஷ்டியார் தெருவில் பாடிக் கொண்டுசெல்வது வழக்கம். பாடிய பாட்டுக்களையே தினமும் பாடுவது கண்டு சலிப்புற்ற பாரதி 'நான் சொல்லித் தருகிறேன் புதுப் பாட்டு' என்று கூறி பஜனைப் பாட்டு மெட்டிலேயே,

'காக்கைச்சிறகினிலே
நந்தலாலா—நின்றன்
கரியநிறம் தோன்றுதையே
நந்தலாலா'

என்று பாட ஆரம்பித்து விட்டார்.

● பாரதியின் நண்பர் நீலகண்ட பிரம்மச்சாரி ஒரு நாள் காலை பாரதியின் வீட்டுக்கு வந்த போது, பாரதி

...காக்கைச் சிறகினிலே.



வீட்டில் இல்லை. வீட்டில் இருந்த அவர் மனைவி, என்ன விஷயம் எனக் கேட்க அவர் 'கையில் பணமில்லை ஏதாவது கொடுங்கள்' என்றார். செல்லம்மாள் வீட்டிலிருந்த இரண்டணாவைத் தேடி எடுத்துக் கொடுத்தனுப்பினார். அவர் மறுபடியும் அன்று இரவு பத்து மணிக்கு வந்து பாரதியிடம், 'கொடுத்த இரண்டணா செலவழிந்து விட்டது. இனியும் பசிதாங்க முடியாது. பணம் இருப்பவனை மிரட்டிப் பணம் பறிப்பதுதான் ஒரே வழி என்று தோன்றுகிறது' என்று விரக்தியுடன் கூறினாராம். நண்பரின் நிலை கண்டு வருந்திய பாரதியார்

'தனியொருவனுக்கு உணவில்லையெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்'

என்று பாடினாராம்.

● குற்றாலம் சென்று அருவி அருகே மலை மேல் நடக்கையில் எதிர்பாராத விதமாய் ஸ்ரீ அய்யரும் அவரது மகள் சுபத்ராவும் அருவியில் விழுந்து மாண்டனர். இது பாரதியை வெகுவாகப் பாதித்தது. 'உன்னிடத்தில் என்னென்ன எதிர்பார்த்தேன்? புதுமைப் பெண்ணாய் நீ விளங்கப் போகிறாய் என நான் கனவு கண்டேனே! என்னை ஏமாற்றி விட்டாயே!' என வருந்தி, தான் சுபத்ராவை எப்படிக் காண விரும்பினாரோ அதையே 'புதுமைப் பெண்' பாடல்களாய்ப் பாடினார்.

பாரதியின் பேரன் வழக்கறிஞர் ரவிச்சந்திரன் கூறக் கேட்டு எழுதியவர்: எஸ். சந்திரமௌலி

...சித்திரமே! மட அன்னமே!...



சுவர்ணமுகி



ஸ்ரீவேணுகோபாலன்

''மனம் தெரியாத ஆளை நினைத்து ஏங்கி வெட்கமுறுகிறேன். எத்தனை நாள் மதன் என்னைக் கொடுமையாகத் துன்புறுத்தப் போகிறான்?''

- காளிதாசனின் மாளவிகா

## 37

சுவர்ணமுகியின் மின்னல் கண் அவனை ஒருமுறை உலுக்கியது.

அதன் பரவசத்திலிருந்து மீளுவதற்குள் தோளில் அந்தக் கை விழுந்தது.

திரும்பினான். ஒரு அதிகாரி இரும்புத்தனமான புன்னகையோடு நின்றார்.

கண்களில் தீட்சண்யம் இருந்தாலும் கடுமை இருந்தது. பாதியும் நரைத்த தாடி. தலையில் அதிகாரிக்குரிய பாகை. தமது குதிரையை இடது கையால் இங்கிதமாக இழுத்து அவனைப் பாதித் தீவிரமுடன் பார்த்தார்.

திடுக்கிட்ட அர்ச்சுனன், ''என்ன சுவாமி!'' என்றான்.

''பின்னால் பாருங்கள்'' என்றார் அதிகாரி.

பார்த்தான்.

எறும்புச் சாரை போல் நீண்டிருந்த அவனது கோஷ்டி ஸ்தம்பித்து நின்றிருந்தது.

காரணம் அவனேதான்! அவன் நிற்க, பின்னால் எல்லோரும் வரிசையாக நின்று விட்டார்கள்.

அதேநேரம் முன்னால் போன கோஷ்டி, வால் துண்டிக்கப்பட்ட முண்டம் போல் தனியாய்ப் போய்க் கொண்டிருந்தது.

தன் தவற்றை உணர்ந்த அர்ச்சுனன் திடுக்கிட்டுக் குதிரையைச் சீண்ட, மீண்டும் மந்திரம்போல் கோஷ்டி நகர ஆரம்பித்தது.

கூடவே சவாரியில் வந்த அதிகாரி, அவனுடன் சம இணையாகச் சேர்ந்து கொண்டு புன்னகையை அதிகமாக்கிச் சிதற விடாமல், ''தம்பி'' என்றார்.

ஏற்கெனவே குற்ற உணர்வில் மனம் தளர்ந்து கொண்டிருந்த அர்ச்சுனன் அவரை அரைக் கண்ணால் பார்த்தான்.

''மேலே பார்த்துக் கொண்டிருந்தாயா?'' என்றார் அதிகாரி அவனைப் பார்க்காமலேயே. அவர் குரலில் இருந்த நளினமான நைச்சியம் அவனைத் துன்புறுத்தியது.

''என் நண்பர்கள் எனக்கு விடைகொடுக்க வந்தார்கள். அவர்களைப் பார்த்தேன்'' என்றான் அவன்.

''ஓகோ! மேலே நண்பர்கள் வந்தார்களா? அவர்களை நான் கவனிக்கவில்லையே!'' என்றார் அதிகாரி.

''சுவாமி, தாங்கள் யார்?'' என்றான் அர்ச்சுனன் சிறிதும் தயங்காது.

''நான் அரண்மனைக் காரியம்! பெயர் ரத்னாகரன். சந்திரகிரியிலேயே இருப்பவன்'' என்றார் அவர்.

அர்ச்சுனன் பேசவில்லை. இவரை விட்டுச் சீக்கிரம் தனியாக வேண்டுமே என்று மனம் பிரலாபித்தது.

அப்போதுதான் சுவர்ணமுகியைப் பற்றி நினைக்கலாம்.

ஒரு ராக ஆலாபனம் போல் அவள் நினைவு ஒரு சுக இழையோடு அவனுடன் கூட வரும். மனத்தின் எண்ணங்கள் எல்லாம் கவிதைப் பூக்களாக மலர, ஒரு சுகந்த வாடையோடு இந்தப் பயணம் முழுவதிலும் மிதக்கலாம். அதை அனுபவிக்க விடாமல்...

''நாம் எங்கே போகிறோம் தெரியுமா?'' என்று ரத்னாகரன் கேட்டார்.

''எனக்குத் தெரியாது'' என்றான் அர்ச்சுனன்.

''அதுவே ஆச்சரியமாக இருக்கிறதே!'' என்றார் அதிகாரி.

''எனக்கும் ஆச்சரியம்தான்!'' என்றான் அவன்.

''ஏன் தம்பி! நீதானே தலைவன்?'' என்றார் அவர்.

''வெறும் பாதுகாப்புக்குத்தான். மற்ற விஷயங்கள் எல்லாம் எனக்குத் தெரியாது.''

''ஓகோ!'' என்று சிந்தனையில் லயித்துக் கூறினார் ரத்னாகரன். ''முன்னால் கோஷ்டி போகிறதே, அவர்கள்தான் எல்லாம் போல இருக்கிறது!'' என்று புரிந்து கொண்டவராய்த் தலை அசைத்தார்.

பிறகு குதிரையோடு ஒரு நொடியைத் தாவிக் கடந்து, ''ஏன் தம்பி! நான் சந்திரகிரியில் இருபது வருடங்களாக இருந்து வருகிறேன். உன்னைப் பார்த்ததில்லையே!'' என்றார் அவர்.

''நான் ரங்கப்பாவிடம் சேவகம் செய்தேன்.''

''தளவாய் ரங்கப்பாவா?''

''ஆமாம்!''

''ஓகோ, அதனால்தான் மகா மன்னர் நாராயணவனச்சீமைக்கு உன்னை அதிபனாக ஆக்கினாரா? நல்லது. உனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதோ?''

''இல்லை சுவாமி!''

''ஓ, அதனால்தான் பாதி சொப்பனத்தில் இருக்கிறாயா?'' என்றார் ரத்னாகரன்.

அர்ச்சுனனுக்கு எரிச்சலாக வந்தது. இவர் என்ன திரிகால ஜோஸ்யரா? என் மனத்தின் அவஸ்தையை அப்படியே விண்டு உரைக்கிறாரே! இவரது பேச்சு ரோதனை எப்போது நிற்கப் போகிறது? மனத்தில் நிச்சலனமாய் சுவர்ணமுகியின் நினைவை புஷ்பிக்க விடாமல் கழுத்தை அறுக்கிறாரே!

''சொப்பனம் இல்லை சுவாமி. நினைப்பில் ஆழ்ந்திருந்தேன்'' என்றான் அர்ச்சுனன் முறித்துக் கொண்டு.

''ராஜ்ய நினைவோ, குடும்ப நினைவோ இருந்தால் நெற்றியில் கருக்கமல்லவா விழும். இங்கே உனக்கு நெற்றியில் பிரகாசம் அல்லவா விழுந்திருக்கிறது! சந்திர உதயம்போல் பிரகாசம்! இந்தப் பிரகாசம் நுட்பமான நினைவுகள் ஏற்பட்டால் அல்லவா முகத்தில் உற்பத்தியாகும்!'' என்றார் அவர்.

அர்ச்சுனனுக்குக் கோபம் வந்தது.

''என்ன நுட்பமான நினைவு, சுவாமி?'' என்று வெடுக்கென்று கேட்டான் அவன்.

''சிருங்காரமான நினைவுகள்! அவைதான் முகத்தில் மெருகேற்றித் தங்கத்தைப் போல் சுடர்க்க வைக்கும். வயசுப் பிள்ளைதானே! யாரை நினைக்கிறாயோ, யாரை வரிக்கிறாயோ? பாவம்! நீ என்ன செய்வாய்? நாட்டில் வரிசையாகச் சண்டைகள் வந்து கொண்டே இருக்கின்றன. இதனால் உன்னைப் போல இளைஞர்கள் தொடர்ந்து ஒரு குடும்ப வாழ்க்கை வாழவிடாமல் ஆகிவிட்டது. நீங்கள் என்ன செய்வீர்கள்? கிடைத்த இடை நேரத்தில் சொப்பனம் காணுகிறீர்கள். நல்லது. நன்றாகக் கண்டு வாருங்கள். நான் அப்புறம் உங்களைப் பார்க்கிறேன்!'' என்று சொல்லி, குதிரைக்கு ஒரு சின்ன ஜாடை காட்ட, அது விரைந்து அப்பால் சென்றது. அர்ச்சுனனுக்குப் பீடை விட்டது போல் இருந்தது.

அவன் மனத்துள் வரத் துடிக்கும் எண்ணங்கள் விரைந்து ஓடிவர, சில விநாடிகளுக்குள் கண்களில் ஒரு ஒளித் திரவம் கூடி ஒரு கனவு லோகத்தைப் பிச்சி அடித்தது. கிழக்கே அற்புதமான சூரியக் கதிர்கள் வானை அளாவி நின்றன. பசுமைக்



காற்று ஒரு மெல்லிய தெம்மாங்கு போல் செவிகளைவருடிச் சென்றது. குளிர்ந்த நீருடன் சுவர்ணமுகி ஆறு வெளிச்சச் செதில்களோடு கண்களைப் பறித்தன.

மனம் ஒரு திக்குமுக்காடும் நிரம்பலுடன் பூரித்து இருக்க, ஆகாயம் முழுதும் ஒரு ஓவியத் துணியாக மாறி அதில் இளவரசி சுவர்ணமுகியின் உருவம் மெல்ல மெல்லச் சம்பவித்தது.

நீல அலைக் கண்கள்! மண்ணும் விண்ணும் நிறைந்த வில்லாகப் புருவம். முறுவல் சதா பிறந்து சிவப்பு ஊறிய உதடுகள். நிலவு வழிந்த முகம். இருட்டின் திரளாகக் கூந்தல்! ''சுவர்ணமுகி, நீ ஏன் எங்களுடன் வருகிறாய்?''

அந்தப்புரப் பரிஜனங்களோடு நீயும் ஏன் பல்லக்கில் வருகிறாய்?

பொக்கிஷத்தைக் கண்டுபிடிக்க நீ உதவு கிறாயா?

உன் ரகசியத்தை மன்னரிடம் வெளியிட்டு விட்டாயா? மன்னர் ஒருவர்தான் உன்னைப் பாதுகாக்கும் திறமை பெற்றவர், மற்றவர் யாவரும் உபயோகமற்றவர்கள் என்று கருதி, எங்களை அப்படியே வேண்டாம் என்று ஒதுக்கி விட்டாயா?

நீ பல்லக்கிலிருந்து இப்போது பார்த் தாயே!

அது ஒரு பரிச்சயப் பார்வையா?
அல்லது வெறுமைப் பார்வையா?
அல்லது இறுமாப்புப் பார்வையா?

உன்னைப் புரியாமல் மனம் தவிக்கிறேன். சுவர்ணமுகி, உன் மனத்தை வாய் திறந்து ஒரு வார்த்தையாவது சொல்லு!

பிரார்த்தனைகளாக விடுத்துக் கொண்டு குதிரையில் அவன் நிதானமாகப் பிர யாணம் செய்தான்.

இடையில் ஒரு இரண்டு இடங்களில் சிரம பரிகாரத்துக்காகச் சற்றுத் தங்கிவிட்டு மாலையில் அந்தி நேரம் கூடும்போது அவர்கள் மானுறு என்ற சிற்றூரை அடைந் திருந்தார்கள்.

பாறையும் மணலும் விரவிய அதன் குறுகலான கரை வெளியில் தண்டு இறங்கிய அவர்கள் இரவுப் பொழுதைக் கழிப்பதற் காகக் கூடாரங்கள் அமைக்க ஆரம்பித் தார்கள்.

கருகருவென்று இருட்டியதும் பற்பல மூலைகளில் சமையலுக்கான அடுப்புத் தீக்கள் மூண்டுகொண்டிருந்தன.

அந்த நதிப் படுகை ஒரு குழிவான பல்லா போல இருந்ததால் நிசப்தம் ஒரு மடங்கு அதிகமாக இறுகியிருந்தது.

பாறை இடுக்குகளில் நதியின் நீர் களுக் களுக் என்று கள்ளச் சிரிப்புச் சிரித்துக் கொண்டிருக்க,

எங்கேயாவது திசைமாறிப்போன பறவை யின் ஒற்றைக் குரல் தீனமாக இழைய,

அந்தப் பல்லா பிரதேசம் முழுவதிலும் ஒரு அதன சோகம் கெட்டியாக இறங்கியது.

எல்லாரும் உணவு அருந்தி அயரும்போது பாதி நிலா மேலே கனிவாக விகசிக்கத் தொடங்கியது.

# ஆன்றோர் வாக்கு

அர்த்தங்களை எடுத்துச் சொல்லி, பிறரை ஆசாரத்தில் நிலைநிறுத்துவதோடு எவன் ஒரு வன் தானே அந்த ஆசாரங்களை அனுஷ் டித்துக் காட்டுகிறானோ அவனே ஆசார்யன் என்பதுதான் ஆசார்ய பதத்துக்கு லட் சணம் (Definition)

-ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

என்றுமே ரோஜா மழை பெய்யப்போவ தில்லை. நமக்கு ரோஜா தேவைப்பட்டால் நாம் ரோஜாச் செடிகளை நட்டுப் பேணி வளர்க்க வேண்டும்.

—ஜியார்ஜ் எலியட்

கெட்ட எண்ணங்கள் மனத்தில் குடி கொண்டால் கெட்டுப் போவோம். கெட்ட எண்ணங்கள் உள்ளத்தில் இடம் பெறாமல் காத்துக் கொள்ள வேண்டும். ஆண்டவ னுடைய அருளை நாட வேண்டும். 'நீயே கதி, உன் பாதமே சரணம்' என்று முழு உள்ளமும் செலுத்தி பாரம் அவன் மேல் போட்டு விட்டால் நிச்சயம் கடைத்தேறு வோம். சந்தேக மில்லை. அவன் கருணைக்கு எல்லையில்லை.

-ராஜாஜி

ஏழை மக்கள்தான் நான் வணங்கும் கட வுள். அவர்களுக்கு வீடு வீடாகச் சென்று கல்வி அறிவைப் பரப்ப முன்வாருங்கள். இடையறாது ஏழை மக்களைப் பற்றியே எண் ணுங்கள். ஏழைகளுக்காக யார் உள்ளம் கசிந்துருகிக் கண்ணீர் சொரிகின்றார்களோ அவர்களே மகாத்மாக்கள்.

—சுவாமி விவேகானந்தர்



சின்னஞ் சிறு குழந்தைகளின் உள்ளங்களிலும் உதடுகளிலும் ஒலிக்கும் 'அம்மா' என்ற சொல் கடவுளின் பெயரேதான்.

— தாக்கரே

இயன்றவரை தமிழே பேசு வேன். தமிழிலே சிந்தனை செய் வேன். தமிழிலே எழுதுவேன். எப்போதும் பராசக்தி — முழு உலகின் முதற்பொருள் — அத னையே தியானம் செய்து கொண் டிருக்க முயல்வேன். அதைக் குறித்தே ஓயாமல் எழுதிக் கொண்டிருக்க முயல்வேன்.

—பாரதியார்

பால்வெளியெல்லாம் நட்சத்திரப் பரல்கள் மௌனச் சுடர்களாகப் பரவி நிற்க,

ஒரு மிருதுவான கனவு வெளிச்சம் அந்த மான் ஆறுப் படுகையில் ஒரு மெல்லிய மா போன்று உதிர்ந்திருந்தது.

அர்ச்சுனன் கனமான இதயமுடன் மெள்ள நதி விளிம்பில் உலாவினான்.

அவன் கால் கணுக்களில் தெள்ளிய ஆற்று நீர் வெள்ளிக் கரைகளுடன் நெளி நெளியாக வந்து சிலும்பியது.

கிழக்கே அந்த நீர் ஜரிகைத் திவலைகளாக மினு மினுக்கிச் செல்ல,

இரு புறமும் கரும் இருட்டுக்களாகக் காட்டுச் செழிப்புக்கள் பரவிக் கிடக்க,

மனத்தின் பருவம் அப்போது அவனுக்கு வசந்தம்! முதல் வசந்தம்! இத்தனை காலமும் அகத்தின் விழி திறக்காது இருந்திருக்க,

இன்று திறந்த பின் அவன் முழுதாக விழித்துப் பார்க்கும் முதன் முதலான மன வசந்தம்!

அது இப்போது குத்தலான ஒரு வேதனையைக் கொடுத்து அவனை அலைக்கழித்துக் கொண்டிருந்தது.

இதுநாள்வரை இதன் சக்தியை அவன் அறிந்தவனல்ல! நாடு, நட்பு, அரசாங்கம் என்றெல்லாம் மனம் தறிகெட்டு ஓடிக் கொண்டிருந்தது. எந்தவிதப் பிரச்னையும் இல்லாமல் மனத்தில் சுயேச்சையாக வாழ்ந்தான் அவன்.

ஆனால் இன்று.

### உயிர்பெற்ற உறுதி மொழி

நான் ஒரு மேல்நிலைப்பள்ளி ஆசிரியர். தினசரி காலை வணக்கம் முடியும். அடுத்தது ஒருமைப்பாட்டு உறுதிமொழி. மாணவர் உரக்கக் கூறுவர். உயிரற்று இயந்திர கதியில் முடியும். ஒருநாள் அது முடிந்து, வகுப்புக்கள் தொடங்கின. ஒரு மாணவன் எழுந்தான். உறுதிமொழியின் ஒரு வாக்கியத்தைக் கூறினான். — I am proud of its rich and varied heritage — விளக்கம் கேட்டுவிட்டான்.

அப்போது, பாரதியின் பாடல் வரிகள் சில பளிச்சிட்டன. மாணவரிடம் மகிழ்ச்சி!

மாரத வீரர் மலிந்த நன்னாடு!
மாமுனிவோர் பலர் வாழ்ந்த பொன்னாடு.
நாரத கான நலம் திகழ் நாடு!
நல்லன யாவையும் நாடுறு நாடு!
பூரண ஞானம் பொலிந்த நன்னாடு!
புத்தர் பிரான் அருள் பொங்கிய நாடு!
பாரத நாடு பழம் பெருநாடே
பாடுவம் இஃதை எமக்கில்லை ஈடே!

- ஞானமேடணுளன்




மனசில் அந்த சுகந்தமான எண்ணங்களும் புதுமையான கிளர்வுகளும் தோன்றிய பின்,

தலை ரீங்கரித்துச் சுற்றியது.

ஊமையான துயரங்கள் மனத்தின் கண்களைச் செல்லாக அரித்தன.

கண்களில் அழுகை. நினைத்தால் பீறிட்டது. நினைக்காவிட்டாலும் கனமாக உறுத்தியது.

எதையும் இழக்காமல் இருந்தும், அவனைச் சோகம் ஒரு மூட்டமாக மூடியிருப்பதை அதிசயமாக உணர்ந்தான் அவன்.

நதியோடு அதன் இறக்கங்களில் இறங்கிச் சற்று அப்பால் சென்று ஒரு மௌனமான இடத்தின் விளிம்புப்பாறையில் ஏறி அமர்ந்து கொண்டான். பாறைகள் சூழ்ந்து ஒரு குகை வாய்போல் தோன்றிய தனியான இடம் அது!

கீழே நீரில் சில்லுச் சில்லாக நிலா.

நிசப்தமாக நிற்கும் காற்று.

இந்தப் புறக்காட்சியில் அவன் மனம் ஐக்கியமாகிப் பிரமித்துக் கிடக்க,

''வீரரே!'' என்று குரல் எங்கோ புராணும் ஆலய மணியின் நாதம் போல் சன்னமாகக் கேட்டது.

பிரமையா?

காதுகளைக் கூர்மையாக்க, மீண்டும் ''வீரரே!'' என்று இனிய குழைவாகச் சப்தம் மெல்லியதாக வந்து மோதியது.

திடுக்கிட்டு அவன் நிமிர்ந்து பார்த்தான்.

அங்கே உயரப் பாறையின் உச்சி விளிம்பில் தெரிவது என்ன?

முழு நிலாவா?

உடலெங்கும் ஒரு பரவசம் ஓட, கண்களைப் பலமுறை கசக்கி மேலே பார்த்தான்.

நம்ப முடியவில்லை.

அங்கே அவள்தானா?

அவனது இளவரசிதானா?

சுவர்ணமுகிதானா?

பாறையில் ஒரு கையை வைத்து ஊன்றி அண்ணாந்து பார்த்தான்.

''வீரரே!''

அவள் குரல் தெளிவாக வந்தது.

அவன் இருதயம் ஒருமுறை வலிதாகக் குலுங்கி நின்றது. கண்கள் ஆரகப் பிழிந்தன.

மேலே தாபத்துடன் பார்த்துச் சில விநாடிகள் தத்தளித்தான்.

பிறகு

''சுவர்ணமுகி!'' என்றான்.

அது ஒரு அன்றில் பறவையின் சோக முழற்றல் போல ஒலித்து மேலே பறந்தது.

இது வாய் திறந்து அவன் அவளது பெயரை அழைத்த முதல் தடவை! அந்த அவளது அழைப்பே அவளைப் பரவசத்தில் ஆழ்த்த,

''நீங்கள்தானா? நீங்கள்தானா?'' என்று உச்சி நோக்கிப் புலம்பினான்.

''வீரரே! நான்தான்! வீரரே நான்தான்!'' என்று அவள் வார்த்தைகள் சிதறின.

அவற்றில் தொனித்த தாபம் கீழே திப்பிழம்பாகவும் இறங்கின. பனிக் கட்டிகளாகவும் இறங்கின.

இரண்டு மூழ்கடித்தவெவ்வேறு உணர்ச்சிகளில் அமிழ்ந்து திக்குமுக்காடி மேலே நோக்கி ஏற எத்தனித்தான் அவன்.

''எழுதீர்கள்! எழுதீர்கள்!'' என்று இரைந்தான் அவன். (தொடரும்)

# பஸ்ஸிலே கேட்டவை!

● ''வீரமணி பேசியிருப்பதைக் கவனிச்சீங்களா? கலைஞர் வீட்டைச் சோதனையிட வந்த அதிகாரிகள் தங்கள் காலணிகளைக் கழற்றப் போனபோது, ''தேவையில்லே, இங்கே மூகாம்பிகை ஏதுமில்லே'' என்று ஜோக் அடிச்சாராம் கலைஞர்!''

''ஆகக்கூடி மூகாம்பிகை இருக்குமிடத்தில் காலணிகளைக் கழற்றி மரியாதை காட்டலாம்கிறதைக் கலைஞரும் சரி, வீரமணியும் சரி ஒப்புக்கிறாங்க! ரொம்ப முன்னேற்றம் தான்!''



● ''பர்மிட் லைசென்ஸ் கண்ட்ரோல்கள் அதிகம்தான்; ஒழிக்கணும்னு ராஜீவ் பேசியிருக்கிறாரே!''

''அதெல்லாம் பேச்சோட சரிங்க; பொன் முட்டை இடற வாத்தைக் கொல்றதுன்றது கதையிலேதான் நடக்கும்!''

● ''துணைத் தேர்தல்கள்லே ஆளும் கட்சிக்குத்தானே அதிகமான வெற்றி கிடைச்சிருக்கு?''

''வேறே யாருக்குக் கிடைக்கும்? எதிர்க் கட்சின்னு ஒண்ணு உருப்படியா இருந்தாத்தானே!''

● ''எதிர்க் கட்சியிலேருந்து ஆளும் கட்சிக்குத் தாவும் எம். பி., எம். எல். ஏ.க்களை ஏராளமா நமக்குத் தெரியும். ஆனா நாகாலாந்தில் ஒரு அதிசயம்! ஒரு தொகுதி மக்கள் தங்கள் இ. காங்கிரஸ் பிரதிநிதியைத் தாங்களே வற்புறுத்திக் கட்சியிலேருந்து விலக வைச்சுட்டாங்க!''

''கட்சிப் பற்று, பதவி ஆசையை ஒதுக்கிட்டுப் பார்த்தா அந்த ஒரு தொகுதி மக்களோட அரசியல் விழிப்புணர்ச்சியை இ. காங்கிரஸ்காரங்களே பாராட்ட முடியும்!''

● ''மாருதி அரசுடைமையாகி ஒரு வருஷமாச்சு; இன்னமும் எந்த அயல்நாட்டுக் கம்பெனியோட கூட்டு வைச்சுக்கிறதுங்கறதே முடிவாகலையாம்!''

''தீர்மானமாகவேண்டிய விஷயங்கள் எவ்வளவோ இருக்கும். அவசரப்பட்டால் எப்படி? யாரோட சொந்தப் பணம் பாழாப் போவுது?''

● ''டயானா — சார்ல்ஸுக்கு மே அல்லது ஜூன்லே குழந்தை பிறக்கப் போகுதாம்!''

''பிறக்கப்போறது ஆணா பெண்ணாங்கிறதை வைச்சுச் சூதாட்டமும் ஏராளமா நடக்குதாம்!''

● ''இரண்டு இளம் பெண்களைப் பலவந்தமா கற்பழிச்ச கேஸிலே கீழ்க் கோர்ட்டின் கடுமையான தண்டனையை உறுதிப்படுத்தியிருக்கார் உயர்நீதிமன்ற நீதிபதி. குற்றவாளிங்க அஞ்சு பேரும் குடிச்சிருந்தாங்களாம்!''

''குடிப் பழக்கத்துக்கு அடிமையாயிட்டா அப்படித்தான். குடிக்கக் காசில்லேன்னாலும் அக்கிரமம் பண்ணச் சொல்லும். குடிச்சு மதி கெட்டுப் போனாலும் அநியாயம் பண்ணச் சொல்லும்.''

● செப்டம்பர் அக்டோபரிலே பிரதமர் அயல்நாடுகளுக்குப் போய் வந்த செலவு எவ்வளவு தெரியுமா? ஒரு கோடியே இருபத்தொன்பது லட்சத்து தொண்ணூற்று ஏழாயிரம் ரூபாய்!''

''பரவாயில்லே! நம்ம நாட்டிலே வோட்டுரிமை உள்ள கோடிக் கணக்கானவங்களுக்கு லட்சத்துக்கும் கோடிக்கும் வித்தியாசம் தெரியாது!''

● ''கேரளாவிலே எஸ்.காங்கிரஸ் இ. காங்கிரஸுடன் சேர்ந்து ஆட்சி அமைக்கத் துடிக்குது. ஆனால் மேலிடத்து அனுமதி கிடைக்க மாட்டேங்குது!''

''மேலிடத்துக்கு என்ன, தாராளமா லட்சியம் பேசும். அன்னிக்கு ஆட்சி உடைந்த போது என்னென்ன பேரம் நடந்துச்சோ, யாருக்குத் தெரியும்?''

● ''முன்பு ஒழுங்கீனங்கள் நடந்ததால் கார்வால் தேர்தலை ரத்து பண்ணி மறு தேர்தலுக்குத் தேர்தல் கமிஷன் உத்தரவிட்டது. மறு தேர்தலும் மாநில அரசின் ஒத்துழைப்புக் கிடைக்காததால் ஒத்திப் போடப்பட்டது. இதில் மாநில இ. காங்கிரஸ் ஆட்சியைத் தேர்தல் கமிஷன் குறை சொன்னதால் கோவிச்சுக்கிட்டோ என்னவோ, நடந்து முடிந்த ஒரு தேர்தலை ரத்துப் பண்ண முடியாதபடிக்குத் தேர்தல் கமிஷனின் அதிகாரங்களையே கட்டுப்படுத்த மத்திய அரசு யோசிக்குதாம்!''

''பின்னே எடுத்த எடுப்பிலேயே மக்களுடைய அதிகாரங்களைக் கட்டுப்படுத்தும் முயற்சியிலா இறங்குவாங்க? சிறுகச் சிறுக உரிமைகளைப் பறிச்சுட்டு வந்தாத்தான் உரிமைகள் பறிபோகிறதே மக்களுக்குத் தெரியாதுங்கிறது எமர்ஜன்ஸிக்குப் பிறகு நல்லா புரிஞ்சிருக்குமே!''

— குட்டி கிருஷ்ணன்



# என்னுயிர் நின்னதன்றோ?

கதை: **சுனீதா**

கவிதை வடிவம்: **குயிலன்**

உன் கண்ணில் நீர் வழிந்தால்-என் நெஞ்சில்
 உதிரங் கொட்டுதடீ
என் கண்ணில் பாவையன்றோ - கண்ணம்மா!
 என்னுயிர் நின்னதன்றோ

- பாரதியார்

கட்டிலும் பீரோவும்
 கால்பதியும் தூசியுமாய்
ஒட்டடையால் போர்த்து
 உறங்கியது மாடியறை!

மாடியைக் காலிசெய்து
 வாடகைக்கு விடச்சொல்லி
கோடு கிழித்துவிட்டாள்
 குடியரசி; தாண்டுவனோ?

அட்டை எடுத்து,
 அறிவிப்பை மைதீட்டி
கட்டடத்தின் நெற்றியிலே
 கட்டிவிட்டேன் 'காலி'யென்று.

வாகை மலர்சூடி
 வரவேற்கும் பாண்டிபஜார்!
ஜாகைக்கும் தோகைக்கும்
 தரகர்அங்கு மெத்தவுண்டு.

தரகரைத் தேடித்
 தவித்தலைந்து வீடுவந்தால்
சரம்போல் பலர்வந்து
 சாரையிடத் தொடங்கிவிட்டார்.



பூவரும்; துண்டுவரும்
  பொக்கைவாய்க் கிழம்வரும்
யாவரும் வேண்டுமென்றால்
  யாருக்கு நாங்கள்விட?

அனைவரிலும் தேர்வு பெற்றான்
  அழகான ஓரிளைஞன்.
மனைவியுடன் குடியேற
  வாக்களித்தான்; தொகைதந்தான்.

மதுரை பூர்விகமாம்
  மாற்றலில் வந்தவனாம்!
இதுவரையில் இப்படியோர்
  இனியவனைக் கண்டதில்லை!

மறுநாள் அவனும்
  மனைவியும் பெட்டிகளும்
றிசாக்கில் தட்டுமுட்டும்
  சேர்ந்துவந்து குடியேற்றம்.

நிர்மலா குடிவந்தாள்
  நிலம்பார்த்து நடைநடந்தாள்
தர்மம் பிறழாத
  தங்கக் குலவிளக்கு!

காலையிலே சங்கர்
  காரியா லயம்சென்றால்
மாலையிலே தான்வருவான்,
  மாடியிலே அவளிருப்பாள்.

சாந்தபவன் பொட்டலமும்
  தண்ணீரும் பசியாற்றும்
சேர்ந்துவந்து மல்லிகையும்
  சிரிப்பும் மணம்பரப்பும்!

அகமுண்டு: புறமில்லை
  அமைதியிலே அவளிருந்தாள்!
நகர்ந்தன ஓரிருநாள்.
  நாங்கள் வியந்திருந்தோம்!

நாலாம்நாள் மாலையிலே
  நான்வீடு வருகையிலே



மேலே பெரும்சப்தம்!
வீதியெலாம் வாசலின்முன்.

சென்றங்கு பார்த்தேன்;
திகைத்தேன்; உளம்பதைத்தேன்!
நின்றிருந்தார் ஒருபோலீஸ்;
நிலைகுலைந்தார் மற்றொருவர்!

''ஊரைவிட்டு ஓடிவந்து
ஊர்சிரிக்கச் செய்தெங்கள்
பேரைக் கெடுத்தவளே
பேயே புறப்படடி!''

என்றே அறைந்தார்
''என்ன?''என்று நான்கேட்டேன்.
நின்ற உறவினரோ
நிலையை எடுத்துரைத்தார்.

''அடிப்பவர் அவளண்ணன்
அரசுப் பணியாளர்.
தடிப்பயல் ஒருவனுடன்
தங்கையிவள் வந்துவிட்டாள்.

போக்கு வரத்தில்நான்
போலீஸ்; அவர்க்குறவு
தாக்கல் கொடுத்துவிட்டேன்
தலைதெறிக்க ஓடிவந்தார்.''

என்றுசொல்லி இருவருமே
இளங்கிளியை இழுத்தேக
ஒன்றும் புரியாமல்
உளம்வெம்பி நின்றுவிட்டேன்!

சற்றே இருட்டியபின்
சங்கர்வந்தான் சாவிதந்தேன்.
முற்றும் இடுக்கிட்டான்
முகத்திலே பேயறைய

''அவளெங்கே?'' என்றான்.
அத்தனையும் நான்சொன்னேன்!
சவமாகா நடைப்பிணமாய்
தடுமாறி மேல் சென்றான்.

என்மனைவி துளைத்தெடுத்தாள்:
''ஏதுக்குங்க வீண்வம்பு?
முன்பணத்தை விட்டெறிந்து
முழுகுங்கள் தலையை''என்றாள்.

மாடிக்குப் போனேன்.
மதிமயங்கி நின்றிருந்தான்.
ஓடியகண் ணீரொழுக
உண்மைக் கதைசொன்னான்:

''பெண்ணாகப் பாரதத்தில்
பிறந்ததவள் முதல்குற்றம்.
கண்ணாலம் செய்வதற்குக்
காத்திருந்த தொருகுற்றம்.

பெண்ணாளைப் பணங்கேட்கும்
பித்தர்களில் ஒருவனுக்கு
அண்ணாவும் பெற்றோரும்
அவளுயிரைத் தானமிட்டார்.

கட்டியவன் வீட்டினிலே
கால்வைத்த மூன்றாம்நாள்

திட்டி உதைத்துத்
திருப்பிவிட்டான் 'போ'என்று.

பணம் இன்னும் பாக்கியாம்!
பாத்திரங்கள் ஓட்டையாம்!
பிணம்தின்னும் கழுகுக்குப்
பெண்ணெதற்கு? பேய்போதும்!

கொட்டிக் கொடுக்கஒரு
கோடாரிக் காம்பிருந்தால்
கட்டிவைத்துக் கறப்பதற்குக்
கசக்குமோ அவனுக்கு?

தாய்வீட்டில் இவளிருந்தாள்.
அவன்மீண்டும் மணம்புரிந்தான்.
பாய்போட்டால் தூக்கமில்லை
பாவைஇவள் மனம்எரிந்தாள்.

தாய்வீட்டின் மறுபக்கம்
தனியேநான் குடியிருந்தேன்.
பாயும்விழி உறவாடப்
பழகிஎன் உயிரானாள்.

எனக்கிங்கே மாற்றல்
இருவருக்கும் நல்வாய்ப்பு.
மனக்கோட்டை கட்டி
மதுரைவிட்டு இங்குவந்தோம்.

பதிவு மணம்புரிய
பாரமிதோ கொண்டுவந்தேன்.
விதிவந்தாற் போல்வந்து
வீணடித்தான் அவளண்ணன்.

உயிரும் உடலுமென
ஒன்றாகி இங்குவந்தோம்.
உயிரைப் பிரித்துவிட்டார்.
உடலெதற்கு?'' என்றழுதான்.

தனியே அவனிருந்தால்
தப்பென்று அழைத்துவந்து
வெளியே படுக்கவைத்து
வீட்டுக்குள் நான்சென்றேன்.

கதையெல்லாம் சொன்னேன்
'கருமம்'என்றாள் என்மனைவி.
இதயத்தில் நோவோடு
இரவிலே கண்ணயர்ந்தேன்.

மறுநாள் காலையிலே
வந்திருந்த நாளிதழில்
குறுவாளாய் ஒருசெய்தி
குத்தியது. நான்படித்தேன்:

''மதுரை ரயிலில்
மதுராந்தகமருகில்
குதித்தே உயிர்விட்டாள்
குமரிப்பெண் நிர்மலா!''

சங்கதியை எப்படிநான்
சங்கருக்குச் சொல்வதென்று
அங்கம் பதறி
அவனுறங்கும் இடம்சென்றேன்.

துயர்ச் செய்தி கேட்டுத்
துடிக்க அவனில்லை.
உயிரின்றிப் பாவியவன்
உடலைமட்டும் போட்டிருந்தான்!

# JOHNSON®
## மிக்ஸர் கிரைண்டர்

# புதிதாக மாற்றியமைக்கப்பட்டதால் மேன்மையாக இயங்குகிறது: விரைவாகவே குளிர்ச்சியடைகிறது.

தீவிர ஆராய்ச்சி மற்றும் கடும் உழைப்பின் விளைவாக ஜான்ஸன் அளிக்கும் புதிய, மேன் படுத்தப்பட்ட மிக்ஸர்-கிரைண்டர் எல்லா வேலைகளையும் சிறப்பின் சிகரமாகச் செய்கிறது.




**கிளர்ச்சியூட்டும் புது அம்சங்கள் பாரீர்!**

**முழுமையான செயலாற்றலுக்காக தனிச்சிறப்பு வாய்ந்த பிளேடுகள்**

இரு கிண்ணங்களிலும் அமைக்கப்பட்ட புதிய பிளேடுகள் மேலும், கீழும் மற்றும் சுழன்றும் இயங்குவதால் முழுமையான செயலாற்றல் கிடைக்கிறது. கட்டிகளோ, தானியங்களோ இருக்க வாய்ப்பில்லை.

**மேல்பாகத்தில் இடைவெளி இருப்பதால் துரித குளிர்ச்சி**

சூடான காற்று துரிதமாக மேல்பாக இடைவெளியிலிருந்து வெளியேறுவதால் மோட்டார் சூடாகாமல் 45 நிமிடங்கள் தடையின்றி இயங்க முடிகிறது. சாதாரணமாக மோட்டார் எரிந்து விடும் அபாயமில்லை.

**புதிய கலவை கிண்ணம் தாராளமான காற்றோட்டத்திற்கென.**

கலவைகிண்ணத்தின் வளைந்த உட்பாகம் பிளேட் இயங்குவதற்கு வாகாக அமைக்கப்பட்டிருக்கிறது. சீரான கலவை கிடைப்பதோடு சரியான அளவுதான் இதில் அடங்கும்.

**எவர்சில்வர் கிண்ணத்தில் சீரியமுறையில் அமைக்கப்பட்ட கைப்பிடி**

சீரிய முறையில் அமைக்கப்பட்ட கைப்பிடி எவர்சில்வர் கிண்ணத்தைக் கையாள எளிதாகவும், சௌகரியமாகவும் இருக்கிறது.

**சுகாதாரத்திற்கென இரு கிண்ணங்கள்; பாதுகாப்புக்கென இரு பிளேடுகள்**

இரு தனி கிண்ணங்கள் இருப்பதால் கலவை செய்தவுடன் கழுவும் தொல்லையில்லை. வேறு கிண்ணத்தில் அரைக்கலாம். சிரமம் குறைவு. மில்க் ஷேக்குகளில் மசாலா மணம் கலப்பதில்லை. உறுதியாக இணைக்கப்பட்ட பிளேடுகள் முழுமையாக பாதுகாப்பு அளிக்கின்றன. இயங்கும்போது பிளேடுகள் பறந்து செல்லும் அபாயமில்லை.

**ஜான்ஸன் மிக்ஸர் கிரைண்டரின் முதன்மையான சிறப்பு அம்சங்களும் இதிலே உள்ளன.**

- துப்புரவாகச் சுத்தம் செய்ய எளிதாகக் கழற்றக்கூடிய பாகங்கள்
- செம்மையாக வேகத்தை மாற்ற மேன்மையான இஞ்சர் விசை.
- ஒரு வருட உத்திரவாதம் மற்றும் சிறப்பான பின் விற்பனை பணி.

**JOHNSON**

ஆற்றலிலும், இயக்கத்திலும் இணையிலாச் சிறப்பு கொண்டது.

Parade/BE/8122




● ஆரம்பித்து விட்டீர்களா? இந்தக் கிரிக்கெட் போதனையை! இனி வாரா வாரம் எங்கள் கழுத்தை அறுத்துக் கொண்டிருப்பீர்.

பெங்களூர்-21 பாபுகுமார்

● இங்கிலாந்து கிரிக்கெட் அணியினரை வாழ்த்தி வரவேற்ற முதல் தமிழ்ப் பத்திரிகை கல்கிதான்.

சென்னை-44 ஏ. கே. சங்கர்

● திருப்பத்தூர் இருப்பங்களை நேரில் சென்று பார்த்திருந்தாலும் நீங்கள் எழுதியிருந்த அளவுக்கு அறிந்து கொள்ள முடியுமா என்பது சந்தேகமே. அரசியல் விவகாரங்களை கல்கி நடுநிலைமை தவறாமல் எழுதி வருவதை என் நண்பர்கள் பலரும் பாராட்டுகின்றனர். இனியும் தொடர்ந்து இதேபோல் எழுத வேண்டும் என்று வாசகர்கள் சார்பில் நான் வேண்டிக் கொள்கிறேன்.

சுல்பாக்கம் கி. பி. ராஜா

● கார்வால் மக்களைப் பற்றி மட்டும் அதிக அக்கறை எடுத்துக் கொள்ளும் தாங்கள் ஜீவாதார உரிமையை விட்டுக் கொடுக்காமல் ஓட்டுப் போட்ட எங்களுக்கு எங்கள் நாடாளுமன்ற உறுப்பினர்கள் என்ன சாதித்திருக்கிறார்கள் என்று இதுவரை எப்போதாவது தட்டிக் கேட்டதுண்டா? இவர்கள் தேர்தல் நடத்தித்தான் என்ன சாதிக்கப் போகிறார்கள்?

தூத்துக்குடி எஸ். கே. எஸ். நாதன்

● வெள்ளி விழாக் கொண்டாடும் விவேகானந்தன் ஆர்ட்ஸையும் அதன் காரணகர்த்தாவான சோவையும் முன் பக்கத்தில் நிலை நிறுத்திப் பாராட்டி ''கல்கி'' தன் மதிப்பை மேலும் ஒரு படி ஏற்றிக் கொண்டது. வாழ்க அதன் இலக்கியத் தொண்டு.

தக்கலை உ. குமாரசுவாமி

● அப்பாடா.... கடந்த ஒன்பது வாரங்களாக எங்களை அறுத்த ராண்டார்கையின் ''வருவான் ராஜகுமாரன்'' தொடர்கதை ஒரு வழியாய் முடிந்து விட்டது. பெருத்த நிம்மதி! மொத்தத்தில் கதை கத்த பேத்தல். ராமுவின் மாறுதலான ஓவியங்கள் கண்களுக்கு விருந்தளித்தன.

லெட்சுமாங்குடி ஏ. கே. நாசர்

● வருவான் ராஜகுமாரன் மர்மத் தொடர் நல்ல திருப்பங்களுடன் திகில் நிறைந்ததாக இருந்தது. ராண்டார்கை அவருக்கே உரித்தான நடையில் எழுதியிருந்தார்.

தேனி ச. புவனேந்திரன்

● இதற்குத்தான் உம்மைச் சொல்கிறோம்—எதற்கும் ஒருமுறை ஹிந்திப் (தராக) படத்தையும் பார்த்து வையும் என்று! ''இதற்குத்தானு?'' என்ற சிறு கதை வெளியிடுவதைத் தவிர்த்திருக்கலாம் அல்லவா?

மதுரை-1 பி.எல். பரமசிவம்

● சாதாரண மக்களும் நீதிமன்றத்தில் நடக்கின்ற வழக்குகளைப் புரிந்துகொள்ள வேண்டுமென்ற எண்ணத்தில், நீதிமன்றத்தில் கூடுமானவரை தமிழ் மணம் வீச வேண்டும் என்று விரும்பிய பெரியவர்களில் மறைந்த மரியாதைக்குரிய நீதிபதி அனந்த நாராயணன் அவர்களும் ஒருவர்.

அவர் எண்ணம் முழுவதும் ஈடேறாமல் இருப்பதற்குக் காரணம் சட்டச் சொற்களைத் தமிழாக்கம் செய்வதில் பெரியவர்களுக்குள் ஒருமித்த கருத்து இல்லாமல் இருப்பதுதான். உதாரணத்துக்கு Forgery என்ற வார்த்தைக்கு ''போர்ஜரி, கள்ள எழுத்து, அழிகட்டு'' என்ற மூன்று மொழிபெயர்ப்புக்களையும் அனந்தநாராயணன் ''சட்டச் சொற்பொருட் களஞ்சிய''த்தில் தருகிறார். எனவே மொழிபெயர்ப்பு மட்டுமில்லாமல் எழுத்துப் பெயர்ப்பு கூட இருக்கலாம் என்று அனந்த நாராயணன் கருதுவதாகத் தெரிகிறது. மா. சண்முக சுப்பிரமணியம் தமது ''சட்டத்தமிழ்'' என்ற புத்தகத்தில் Forgery என்ற வார்த்தைக்கு 'பொய்யாவணம் புனைதல்' என்று மொழிபெயர்க்கிறார். இதே மொழிபெயர்ப்புதான் தமிழக அரசின் ''ஆட்சிச் சொல் அகராதி''யிலும் காணப்படுகிறது. ஆனால் நீதிபதி மகராஜன் அவர்கள் Forgery க்கு 'சிருஷ்டனை செய்தல்' என்ற மொழிபெயர்ப்பை ''இந்தியத் தண்டனைச் சட்டம்'' என்ற புத்தகத்தில் தருகிறார். உயர் நீதிமன்ற நீதிபதி என்பதை ''நீதிப் பேரரசர்'' என்று ''தீர்ப்புத் திரட்டில்'' பயன்படுத்துகிறார்கள். உரிமையியல் (சிவில்) குற்றவியல் (கிரிமினல்) நீதிமன்றங்கள் என்பன போன்ற அடிக்கடி உபயோகப்படும் வார்த்தைகளுக்குக்கூட வெவ்வேறு விதமாகத் தமிழாக்கம் செய்கிறார்கள். இந்த நிலையை மாற்றுவதற்கு எடுத்துக் கொள்ளப்படும் முயற்சிதான் திரு அனந்த நாராயணன் அவர்களுக்கு நாம் ஆக்கபூர்வமாகச் செலுத்தும் அஞ்சலி ஆகும்.

சென்னை-1 இரா. நடனசபாபதி

# கிரிக்கெட் டெஸ்ட்



## வாசகர் பரிசு ரூ 1500/-

முதல் கூப்பன் 29-11-81 கல்கி இதழில் இடம்பெற்றது. வந்துள்ள விடைகள் பெங்களூர் டெஸ்ட் முடிந்ததும் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படும். கீழே உள்ள இரண்டாவது கூப்பனையும் பூர்த்தி செய்து முடிவு தேதிக்கு முன் அனுப்பிவிடவும். டெஸ்டின் முடிவும் கூப்பனில் உங்கள் முடிவும் ஒத்துப் போனால் ரூ. 100 பரிசு. ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்தளிக்கப்படும்.

ஐந்து டெஸ்ட்களுக்கும் சரியான விடைகளைப் பூர்த்தி செய்து அனுப்புகிறவருக்கு ரூ. 1000 சிறப்புப் பரிசு. இதிலும் ஒருவருக்கு மேல் வெற்றி பெற்றால் பரிசு பகிர்ந்தளிக்கப்படும்.

கூப்பனில் அடித்தல் திருத்தல் இன்றித் தெளிவாய் எழுதவும். சந்தேகம் எழும் விஷயங்களில் ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. கடிதப் போக்குவரத்துக் கிடையாது. உறையின்மேல் ''கிரிக்கெட் டெஸ்ட்'' என்று அவசியம் எழுதவும்.

**கூப்பன், நெ: 2 டெஸ்ட் 3 (தில்லி) முடிவு தேதி டிசம்பர் 21**

| கேள்வி | விடை |
|---|---|
| 1. டாஸ் வெற்றி யாருக்கு? (கேப்டன் பெயர் எழுதவும்) | |
| 2. இந்திய அணியில் அதிகபட்ச ரன்கள் எடுக்கப் போகிறவர் யார்? (இரு இன்னிங்ஸ்களும் சேர்த்து) | |
| 3. இங்கிலாந்து அணியில் அதிகப்பட்ச ரன்கள் எடுக்கப் போகிறவர் யார்? (இரு இன்னிங்ஸ்களும் சேர்த்து) | |
| 4. இந்திய அணியில் அதிகபட்ச விக்கெட்டுகள் எடுக்கப் போகிறவர் யார்? (இரு இன்னிங்ஸ்களும் சேர்த்து) | |
| 5. இங்கிலாந்து அணியில் அதிகபட்ச விக்கெட்டுகள் எடுக்கப்போகிறவர்யார்? (இரு இன்னிங்ஸ்களும் சேர்த்து) | |
| 6. மூன்றாவது டெஸ்ட்டின் தலைசிறந்த ஆட்டக்காரர் என்று தேர்ந்தெடுக்கப்படப் போவது யார்? | |
| 7. மாட்ச் ஏதேனும் ஓர் அணிக்கு வெற்றியாக முடியுமா? வெற்றி தோல்வி இன்றி முடியுமா? | |



என் கையெழுத்து: ______________________

பெயர்: ______________________

விலாசம்: ______________________

______________________

______________________



# சென்னைக்கு மாதம் இரு முறைகள் விஜயம்!



Dr. S. K.

## வாலிப வயோதிக அன்பர்களே!

திருப்பூரில் 26-9-81ந் தேதி சித்த வைத்தியர்கள் சிறப்பு மாநாட்டைத் திறந்து வைத்து பெருமையுடன், வைத்திய அன்பர்களின் முன்னிலையில் மதுரை ஆதீனகர்த்தர் 292 வது குரு மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞான சம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகளால் பழனி டாக்டர் **எஸ். காளிமுத்து** அவர்களுக்குப் பொன்னாடை போர்த்தியும், **"வைத்தியபதி'** என்ற பட்டமும் அளித்து கௌரவிக்கப்பட்டது என்பதை அன்பர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பல சித்த வைத்திய மகாநாட்டில் சிறப்பிக்கப்பட்டு ஏராளமான பட்டங்கள் பெற்ற பழனி சித்த **வைத்தியபதி, வைத்திய திலகம், வைத்தியராஜ் Dr. S. காளிமுத்து** R.M.P. (IND.) V.V.C. A.M.I.H., R.A.M.P., R.H.M.P., அவர்களின் உலகப் புகழ் பெற்ற மருந்துகளால் சுக வாழ்வு வாழுங்கள். அவரின் சுற்றுப் பயணத்தில் – பழனியில் கடிதம் மூலம் ஆலோசனையுடன் சிகிச்சை பெறலாம்.

கீழ்க்கண்ட தொந்திரவுகள் இருந்தால் அலட்சியம் செய்யாதீர்கள். நீங்கள் கவலைப்படும் பிரச்னையான தாம்பத்திய வாழ்வில் குறைபாடு – ஆண்மை குறைவு, சோர்வு, வீரியக் குறைவு, குடும்ப உறவில் முன்மாதிரி செயல்படுத்த முடியாமை, நரம்பு துவளல், தேக உறுப்புகள் மெலிவு, ஆஸ்துமா, இருமல், கபம், சளி, இளைப்பு, தும்மல், வாத நோய், தூக்கமின்மை, ஊரல், அரிப்பு, கருப்பு-சிவப்பு-வெளுப்பு படைகள், சரும நோய்கள், குழந்தைச் செல்வம் இல்லாமை, அணுக்கள் குறைவு, வெட்கம், நடுக்கம், தோல்வி, உள்-வெளி ரத்த நவமூல வியாதிகள், குடல் புண், வாய்வு, வயிற்று வலி, வாந்தி, எடை குறைவு மற்றும் இதில் குறிப்பிடாத வியாதிகளுக்கும் சிலரிடம் வருடக் கணக்காக மருந்து தொடர்ந்து சாப்பிட்டு நம்பிக்கை இழந்த நோயாளிகளும் எமது 85 வருட பரம்பரை அனுபவ மருந்துகளால் சுக வாழ்வும், மறுமலர்ச்சியும் புத்துணர்ச்சியும் பெறலாம்.

பழனி சித்தர் மருந்துகளே பாரில் சிறந்தவை என்பது உலகம் அறிந்ததே! கேம்புகளில் மருந்து பெறலாம். சந்திக்க முடியாதவர்கள் தபால் மூலம் வி.பி.பி.யில் பெறலாம். தபால் செலவு இலவசம். தாமதியாமல் சிகிச்சை பெறுவது உங்களுக்கு நன்மை தரும்.

### ஒரு மாதம் சிகிச்சை மருந்துகள்

| தங்க பஸ்பம் | தங்க பஸ்பம் சிட்டுக் குருவி லேகியம் | மிக உயர் தரம் | ஆஸ்துமா செட் |
|---|---|---|---|
| மிக உயர் தரம் ரூ. 330 | 90 வேளை ரூ. 180 | செட் ரூ. 90 | ரூ. 124 – 226 |
| சூபர் செட் ரூ. 600 | 60 வேளை ரூ. 120 | சரும நோய் செட் | வயிற்று வலி செட் |
| சூபர் செட் A. ரூ. 900 | 30 வேளை ரூ. 60 | ரூ. 140 – 260 | ரூ. 140 – 260 |

**சென்னை விஜயம்:** தங்கும் தேதிகள்: பிரதி இங்கிலீஷ் மாதம் 10, 11 & 17, 18, 19, 20, 21 தேதிகள்

சென்னையில் தங்கும் விலாசம்: **நியூ உட்லண்ட்ஸ் ஹோட்டல்**
**எட்வர்ட் எலியட்ஸ் ரோடு, சென்னை-600 004** போன்: 83111

பார்க்கும் நேரம்:
காலை 10 மணி முதல் 12 மணி வரை மாலை 3 மணி முதல் 5 மணி வரை

**மற்ற ஊர் கேம்புகள் பத்திரிகைகளில் வெளி வந்து கொண்டிருக்கின்றன**

GOVT. REGD. T.M. No. 204811 REGD. 15443. MFG. Lic. No. 5

**வைத்திய திலகம் வைத்தியராஜ் டாக்டர் S. காளிமுத்து,**
R.M.P. (IND.) V.V.C., A.M.I.H. R.H.M.P., R.A.M.P.

## பழனி சித்தர் வைத்தியசாலை (Regd.) பழனி S.I.

போன்: 316, 316-A. வீடு: 420 பிரஸ்: 361 தந்தி: சித்தர்

பழனியில் பிரதி மாதம் 5ந்தேதி முதல் 8ந்தேதி வரையும், 14ந்தேதியும் 23ந்தேதி முதல் 30ந்தேதி வரை டாக்டரை நேரில் சந்தித்து ஆலோசனை மற்றும் மருந்துகள் பெறலாம்.

# கடுகு பதில்கள்!

⌘ நரேந்திரன், பாரக்பூர்
கே: எல்லாரும் விரும்புவது எது? விரும்பாதது எது?

ப: அறிவுரை கொடுப்பதற்கு அனைவருக்கும் விருப்பம். அறிவுரை கேட்பதற்கு அனைவருக்கும் வெறுப்பம். (இது நானே கண்டு பிடித்த தமிழ்ப் பதம்!)

⌘ வி. ராதா ராணி, ஆரணி
கே: நீங்கள் கிசுகிசு தயாரிப்பாளரா?

ப: கிசு கிசு இப்போது பிசுபிசு ஆகிவிட்டது. நான் 'கிச்சு கிச்சு' தயாரிக்கப் பல வருடங்களாக முயன்று கொண்டிருப்பவன். எப்படி என் ஜோக்! (கடைசி வாக்கியம்: நன்றி—துக்ளக்!)

⌘ ஆர். கஜபதி, நியாகதுருக்கம்
கே: கோழைத்தனம் போவதற்கு ஒரு வழி சொல்லுங்கள்?

ப: எதற்குப் போக வேண்டும்? கோழைத்தனமும் நல்லதற்கே. கோழைத்தனத்தால்தான் நம்மில் பலர் ரௌடிகளாகவில்லை; பிக்பாக்கெட்டுகளாகவில்லை. கற்பழிப்பவர்களாக மாறவில்லை. நம்மில் பலர் கடைப்பிடிக்கும் நல்ல குணங்களுக்கு அஸ்திவாரம் கோழைத்தனம் என்றும் கூறலாம். நான் கூறுவது தத்துவம் அல்ல. அவரவர் யோசித்துப் பார்த்தால் தெரிய வரும் உண்மை.

⌘ சத்தியதேவன், கரூர்
கே: தண்ணீர், தண்ணீர்-தடை வருமா?

ப: தண்ணீருக்கும் மடை போடுவது உண்டு. தடை போடுவது இல்லை.

⌘ நிரஞ்சனு சந்தானம், புதுவை-3
கே: ஆண்டவனைத் தொழும் போதும் தன்னலம் தானே முன்னே நிற்கிறது? இப்படித் தொழுவது நல்லதா?

ப: நல்லதா இல்லையா என்று யார் பார்க்கிறார்கள்? மனச் சாந்திக்காகவோ வெறும் பக்தி உணர்வுடனோ ஆண்டவனைத் தொழுபவர்கள் வெகு சிலரே. பெரும்பாலோர் 'வேண்டுதல்' தான் செய்கிறார்கள். ஒரு குட்டிக்கதை. ஒரு பக்தர் வாரா வாரம் ஆஞ்சநேயருக்கு வடை மாலை சாற்றுவார். பல வருடங்களாகச் செய்து வந்தவர் திடீரென்று ஒரு வாரம் வெறும் தேங்காயைக் கொடுத்தார். அர்ச்சகர் கேட்டார்: ''இந்த வாரம் வடை மாலை இல்லையா?'' பக்தர் சொன்னார்: ''வடை மாலையை நிறுத்தி விட்டேன். உளுந்து வடை என் உடம்புக்கு ஒத்துக்கொள்ளவில்லை'' (ராமகிருஷ்ண பரமஹம்சரின் குட்டிக் கதையைத் தழுவியது)







⌘ கே. பிரதாப் சிங், அரகண்ட நல்லூர்
கே: கேள்வி-பதில் பகுதி மூலம் தாங்கள் தெரிந்து கொண்டது என்ன?

ப: நிறைய. பல கேள்விகளுக்குப் பதில் எனக்குத் தெரியவில்லை என்பதைத் தெரிந்து கொண்டேன். ஏன், பல கேள்விகளே எனக்குத் தோன்றியிருக்காது என்பதையும் தெரிந்து கொண்டேன். என்னையே நான் அறிந்து கொள்ள உதவி வருகிறது.

⌘ சி. என். ராமன், சாந்தாகுரூஸ்
கே: புதுவருஷம் எப்படி இருக்கும்?

ப: விலைவாசிகள் ஏறிக்கொண்டுதான் இருக்கும். எல்லா அரசியல் கட்சிகளும் ஏழைகளுக்காகப் பாடுபடும்! ஏழைகளின் பாடு இம்மியளவும் மாறாது. பல புதிய தமிழ்ப் பத்திரிகைகள் பூக்கும். வேறு சில வாடக்கூடும். தமிழ்த் திரையில் புதிய மைல் கற்கள் பதியும். குப்பைப் படங்கள் குவியும். விரைவில் முடங்கிப் போகும்.

⌘ அனுராதா செல்லப்பா சென்னை-40
கே: பழமொழிகளைப் பிற்காலத்திற்காக இப்போதுஉருவாக்க வேண்டாமா?

ப: இன்று நாம் அன்றாட வாழ்க்கையில் கூறும் ஒரு சில வாசகங்கள் பல வருடம் கழித்தும் ஜீவனுடன் இருந்தால் அவை பழமொழிகள் ஆகும். பழமொழிகளைத் திட்டமிட்டு உருவாக்க முடியாது. அப்படி உருவாக்க முயன்றாலும், அதில் பழைய பழமொழியின் சாயல் இருக்கும்.

பரிசு பெறுபவர்:

கே. பிரதாப் சிங்
73-ஏ, காமராஜ் ரோடு
அரகண்ட நல்லூர்
605-752




சூதாட்டத்தில் நாட்டை இழந்த தருமன் அடுத்தடுத்துதம்பியரையும் தன்னையுமே பந்தயம் வைத்துத் தோற்று விடுகிறான். இந்த இடங்களிலே பாரதி தனது தனிப்பட்ட உணர்ச்சியை வெளிப்படுத்தவில்லை. முதலில் தருமன் நகுலனையும் சகாதேவனையும் பந்தயம் வைத்துத் தோற்று விடுகிறான். அது முடிந்ததும், மூத்த தம்பியரான பீமனையும் அர்ச்சுனனையும் விட்டுவிட்டு, இளையவர்களான நகுலனையும் சகாதேவனையும் பந்தயம் வைத்ததற்கு சகுனி உள் நோக்கம் கற்பிக்கிறான். தருமன், பீமன், அர்ச்சுனன் ஆகிய மூவரும் குந்தியின் வயிற்றில் வந்தவர்கள். நகுலனும் சகாதேவனும் பாண்டுவினுடைய இரண்டாவது மனைவியான மாத்திரியின் மைந்தர்கள். இதை எடுத்துக் காட்டி, 'உடன் பிறந்தாரை ஒதுக்கிவிட்டு மாற்றாந்தாய் மக்களை வைத்து ஆடினாயோ?' என்று சகுனி தருமனைக் கேலி செய்கிறான். ஆம்; ஆங்கிலேயர்கள் இந்து - முஸ்லிம்களைப் பிரித்தாள முயன்றது போல!

இந்த இடத்திலே பாரத மக்களுக்குத் தேவைப்படும் ஒற்றுமை உணர்ச்சியைத் தருமன் மூலமாகப் பாரதியார் போதிக்கிறார். சகுனியைப் பார்த்துத் தருமன் சொல்லுகிறான்:

''எங்களில் ஒற்றுமை
  தீர்ந்திடோம் — இவர்
எண்ணத்தில், ஆவியில்
  ஒன்றுகாண்''

இப்படிக் கூறிய தருமன் முதலில் பார்த்தனையும், அடுத்து வீமனையும் பந்தயம் வைத்து வழக்கம்போலத் தோற்று விடுகிறான். பின்னர் தன்னையும் பணயம் வைத்து, அதிலேயும் தோற்றுவிடுகிறான்.

பாரதியார் பாஞ்சாலி சபதத்திலே நான்காவது சருக்கமாக அமைந்துள்ள ''துகிலுரிதல் சருக்கத்''திலே தமது புலமைத் திறன் அனைத்தையும் கொட்டிக் குவித்து விட்டிருக்கிறார். அபாரமான கற்பனைகளையும் வழங்குகிறார்.

இந்தச் சருக்கத்திலேதான் தருமன் பாஞ்சாலியைச் சூதில் தோற்கிறான். துரியோதனன் அந்த வீராங்கனையை அவமானப்படுத்த எண்ணித் துச்சாதனன் மூலம் அவளை அரசவைக்கு அழைத்து வரச் செய்கிறான். அதனால் இந்தச் சருக்கத்திலே வரிக்கு வரி பாரதியாரின் சொந்த உணர்ச்சி கலந்திருக்கக் காண்கிறோம். சருக்கத்தின் தொடக்கத்திலேயுள்ள நான்கு செய்யுட்களும் கவிக் கூற்றாகவே அமைந்திருக்கின்றன.

பாஞ்சாலி சூதாட்டத்தில் தோற்கப்படவிருக்கும் கட்டம் வந்ததுமே பாரதியாருக்கு அந்த மாதரசியிடம் பரிதாபம் ஏற்பட்டு விடுகிறது. இரண்டு செய்யுட்களிலே அவளுடைய அழகையும், பெருமைகளையும் கவிஞர் வருணிக்கிறார். அவை வருமாறு:

''பாவியர் சபைதனிலே — புகழ்ப்
  பாஞ்சால நாட்டினர் தவப் பயனை,
ஆவியி னினியவளை — உயிர்த்
  தணிசுமந் துலவிடு செய் யமுதை,
ஓவியம் நிகர்த்தவளை — அரு
  ளொளியினைக் கற்பனைக் குயிரத னைத்
தேவியை நிலத் திருவை — எங்குந்
  தேடினும் கிடைப்பருந் திரவியத் தை.
''படிமிசை இசையுறவே — நடை
  பயின் றிடுந் தெய்விக மலர்க் கொடியை
கடிகமழ் மின் னுருவை — ஒரு
  கமனியக் கனவினைக் காதலினை,
வடிவுறு பே ரழகை — இன்ப
  வளத்தினைச் சூதினில் பணயம் என்றே
கொடியவர் அவைக் களத்தில் — அறக்
  கோமகன் வைத்திடல் குறித்து
    விட்டான்.''

துரியோதனாதியரின் அவையை ''பாவியர் சபை'' என்றும், கொடியவர் அவைக் களம்'' என்றும் கூறிப் பழிக்கிறார். துரியோதனாதியருக்குத் திரௌபதியைத் தருமன் அடிமைப்படுத்திய செயலை,

''வேள்விப் பொருளினையே புலை நாயின் முன்
  மென்றிட வைப்பவர் போல்,
நீள்விட்ட பொன்மாளிகை கட்டிப் பேயினை
  நேர்ந்து குடியேற்றல் போல்
ஆள்விற்றுப் பொன் வாங்கியே செய்த
    பூணையோர்
  ஆந்தைக்குப் பூட்டுதல் போல்
கேள்விக் கொருவரில்லை உயிர்த் தேவியைக்
  கீழ்மக்கட் காளாக்கினான்''
என்கிறார்.

சூதாட்டத்தில் பாஞ்சாலியைப் பணயம் வைத்துத் தோற்றது பற்றிக் கூற வேண்டியிருக்க அதனைச் சற்று ஒதுக்கி வைத்துவிட்டு, அந்தக் கொடுமையைச் சாடுவதற்குக் கவிஞர் நேரம் எடுத்துக் கொள்கிறார்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: P.S. Mani, Layout Artist: Kalpana, Editor: K. Rajendran

